**22.** கம்பளை இராசதானிக் காலத்தில் அரசியல் துறையில் காணக்கூடிய சிறப்பியல்பு யாதெனில்,
(1) இந்து மற்றும் மஹாயான செல்வாக்கினால் சிலைமனைகளில் தேவாலயங்கள் அமைத்தல்
(2) தூது இலக்கியங்களைப் படைக்க ஆரம்பித்தல்
(3) தாய்வழி அரசுரிமை முறை ஆரம்பமாதல்
(4) அரசுரிமை ஒரே அரச குடும்பத்தின் தந்தையிலிருந்து - தனயன்மாருக்கு உரித்தாதல்

**23.** யாழ்ப்பாண அரசு வீழ்ச்சியடைதல் பற்றிய **பிழையான** கூற்றைத் தெரிவு செய்க.
(1) அரசுரிமையாளரிடையே உரிமைப் போராட்டங்கள் ஏற்பட்டமை
(2) யாழ்ப்பாண ஆட்சியாளருக்கு நிலையான படையொன்று காணப்படாமை
(3) இயற்கையரண்களாலான பாதுகாப்பின்மை
(4) யாழ்ப்பாணத்தின் பெரும்பான்மையான மக்கள் போர்த்துக்கேயருக்குச் சார்பாகவிருந்தமை

- பின்வரும் வரலாற்றுச் சம்பவங்களின் துணையுடன் **24, 25** ஆம் வினாக்களுக்கு விடை தருக.

A – தந்துரேப் போரில் போர்த்துக்கேயர் தோல்வியுறல்
B – குசுமாசன தேவி தோன கத்தரினா எனும் பெயரில் ஞானஸ்னானம் பெறல்
C – நாயக்கர் வம்சத்திற்கு கண்டி இராசதானியின் அரசுரிமை வசமாதல்
D – இந்நாட்டில் சீயம் நிக்காய ஆரம்பமாதல்

**24.** மேற்படி சம்பவங்களில் சரியான வரலாற்றொழுங்குமுறையைத் தருக.
(1) A, B, D, C (2) B, C, A, D (3) A, C, B, D (4) B, A, C, D

**25.** C எழுத்தினால் காண்பிக்கப்பட்டுள்ள வரலாற்று நிகழ்வுடன் தொடர்புடைய மன்னர் யார்?
(1) ஸ்ரீ வீர பராக்கிரம நரேந்திரசிங்கன் (2) கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன்
(3) ஸ்ரீ விஜய இராஜசிங்கன் (4) இராஜாதி இராஜசிங்கன்

- பின்வரும் அட்டவணையில் A தொடக்கம் F வரையிலான தகவல்கள் மூலம் **26, 27** ஆம் வினாக்களுக்கு விடை தருக.

| செல்வாக்குச் செலுத்திய காரணி | தலைவன் | ஆளுநர் |
|---|---|---|
| A - அரசின் வரிக்கொள்கை | C - கெப்பிற்றிபொல திசாவை | E - டொரிங்டன் பிரபு |
| B - அரசன் இல்லாமை பற்றிய வருந்துதல் | D - கொங்காலேகொட பண்டா | F - சேர் றொபர்ட் பிரவுன்றிக் |

**26.** கி.பி 1818 ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்துடன் தொடர்படைய தகவல்களைக் காட்டும் விடை எது?
(1) A, C, E (2) B, C, F (3) A, D, F (4) B, D, E

**27.** கி.பி 1848 ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்துடன் தொடர்புடைய தகவல்களைக் காட்டும் விடை எது?
(1) A, D, E (2) B, D, E (3) A, C, F (4) B, C, F

**28.** 19 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஏற்பட்ட சமய மற்றும் கலாசார மறுமலர்ச்சியுடன் தொடர்பான கருத்துச் சோடிகள் சில பின்வருமாறு. இவற்றில் **பொருத்தமற்ற** சோடி எது?
(1) ஹென்றி ஸ்டீல் ஒல்கொட் அவர்கள் - பௌத்த பிரம்ம ஞான சங்கம் தாபிக்கப்படல்
(2) ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கல தேரர் - பேலியகொட வித்யாலங்கார பிரிவேனா ஆரம்பிக்கப்படல்
(3) ஆறுமுக நாவலர் அவர்கள் - உதய பானு என்ற பத்திரிகை ஆரம்பிக்கப்படல்
(4) சித்திலெப்பை அவர்கள் - மரதானை சாஹிரா கல்லூரி ஆரம்பிக்கப்படல்

**29.** கீழே காட்டப்பட்டுள்ள இலங்கையில் பிரித்தானியராட்சியினால் ஏற்பட்ட சில மாற்றங்களில் கலாசார மாற்றங்கள் இரண்டைக் காட்டும் விடை எது?

A – தொழிலாளர் வகுப்பு உருவாதல்
B – மேலைத்தேய ஆடையணிகள், பழக்க வழக்கங்கள் இந்நாட்டின் சமூகத்துடன் கலத்தல்
C – மேலைத்தேய கல்வி பரவுதல்
D – வேதனத்திற்காக வேலைசெய்யும் ஊழியப் படையொன்று உருவாதல்
E – தொழிற்சங்கங்கள் தாபிக்கப்படல்

(1) B, C (2) C, D (3) B, E (4) C, E

**30.** இலங்கை தேசிய சங்கத்தின் முதலாவது தலைவராகப் பதவி வகித்தவர் யார்?
(1) சேர். டீ. பீ. ஜயதிலக்க அவர்கள் (2) பொன்னம்பலம் அருணாசலம் அவர்கள்
(3) எப். ஆர். சேனாநாயக்க அவர்கள் (4) பொன்னம்பலம் இராமநாதன் அவர்கள்

**31.** 1978 ஆம் ஆண்டு அரசியலமைப்பிற்கிணங்க தேசிய முக்கியத்துவம் வாய்ந்த விடயமொன்று தொடர்பில் தீர்மானமெடுக்கப் பின்பற்றக்கூடிய ஜனநாயக வழிமுறை எது?
(1) பாராளுமன்றத்தில் விவாதம் நடாத்துதல் (2) உயர்நீதிமன்றத்தில் முன்வைத்து தீர்ப்பை பெறல்
(3) பொதுசன அபிப்பிராயத் தேர்தல் நடாத்துதல் (4) நாட்டிலுள்ள கல்விமான்களின் கருத்துக்களைக் கேட்டறிதல்

● பின்வரும் A, B என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு **32, 33** ஆம் வினாக்களுக்கு விடை எழுதுக.

A – டெனிஸ் மைதான உறுதிமொழி

B – சரஜிவோ நிகழ்வு

**32.** பிரெஞ்சுப் புரட்சியுடன் தொடர்பானது,

(1) A, B உண்மையற்றது (2) A, B உண்மையானது

(3) A உண்மையானது என்பதுடன் B உண்மையற்றது (4) A உண்மையற்றது என்பதுடன் B உண்மையானது

**33.** முதலாம் உலக மகா யுத்தத்துடன் தொடர்பானது,

(1) A, B உண்மையற்றது (2) A, B உண்மையானது

(3) A உண்மையானது என்பதுடன் B உண்மையற்றது (4) A உண்மையற்றது என்பதுடன் B உண்மையானது

● பின்வரும் A, B, C, D ஆகியவற்றில் தரப்பட்டுள்ள கூற்றுகள்/பதங்களைக் கருத்திற் கொண்டு **34** தொடக்கம் **36** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

A – 1. கடலோடி ஹென்ரி
2. நாடுகாண் பயணம்

B – 1. இரண்டாம் உலக மகாயுத்தம்
2. சர்வதேச சங்கம்

C – 1. கொன்ஸ்தாந்திநோபிளை துருக்கியர் கைப்பற்றுதல்
2. மறுமலர்ச்சி தொடங்குதல்

D – 1. உலகம் பற்றிய புதிய கண்டுபிடிப்புக்கள்
2. விஞ்ஞான முன்னேற்றம்

**34.** முதலாவதின் அனுசரணையின் காரணமாக இரண்டாவது வெற்றிபெற்றமை தொடர்பான கூற்றுச்/பதச் சோடி எது?

(1) A (2) B (3) C (4) D

**35.** முதலாவதிற்கும் இரண்டாவதிற்குமிடையே **தொடர்பின்மையைக்** காட்டும் கூற்றுச்/பதச் சோடி எது?

(1) A (2) B (3) C (4) D

**36.** முதலாவது இரண்டாவதின் வளர்ச்சிக்கு ஏதுவாயமைவதைக் காட்டும் கூற்றுச்/பதச் சோடி யாது?

(1) A (2) B (3) C (4) D

● உலகின் முக்கிய புரட்சிகளுடன் தொடர்பான தகவல்கள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் **37, 38** ஆம் வினாக்களுக்கு விடை தருக.

A - சமாதானம், காணி மற்றும் உணவு

B - ஸ்டேட் ஜெனரல் சபை

C - பிரதிநிதித்துவமின்றேல் வரியில்லை

D - பஸ்டீல் சிறைச்சாலை தாக்கப்படல்

**37.** ரஷ்யப் புரட்சியின் தாரக மந்திரமானது

(1) A ஆகும். (2) B ஆகும். (3) C ஆகும். (4) D ஆகும்.

**38.** அமெரிக்க சுதந்திரப் போருடன் தொடர்பான தகவலானது,

(1) A ஆகும். (2) B ஆகும். (3) C ஆகும். (4) D ஆகும்.

**39.** கீழே தரப்பட்ட கடமைகளுடன் தொடர்புடைய ஐக்கிய நாடுகளின் நிறுவனம் யாது?

● பாதுகாப்புச்சபையின் சிபாரிசுடன் பொதுச் செயலாளரை நியமித்தல்
● சர்வதேச நீதிமன்றத்தின் நீதிபதிகளை நியமித்தல்
● புதிய உறுப்பினர்களை நிறுவனத்திற்குச் சேர்த்தல்

(1) பொதுச்சபை (2) நம்பிக்கைப் பொறுப்புச் சபை

(3) சமூகப் பொருளாதார சபை (4) செயலகம்

**40.** அமெரிக்கா அல்லது ரஷ்ய முகாமைச் சாராது நடுநிலையான அமைப்பொன்றை நிறுவுவதற்கு முயற்சிகளை மேற்கொண்ட தெற்காசிய தலைவர் யார்?

(1) ஜவஹர்லால் நேரு (2) எஸ். டபிள்யூ. ஆர். டீ. பண்டார நாயக்க

(3) அப்துல் கமல் நசார் (4) மார்ஷல் டிட்டோ

❊ ❊ ❊

2.1.3 **வினாத்தாள் I இற்கான எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்**

| வினா இல. | விடை | வினா இல. | விடை |
|---|---|---|---|
| 01. | 2 | 21. | 1 |
| 02. | 3 | 22. | 3 |
| 03. | 3 | 23. | 4 |
| 04. | 4 | 24. | 4 |
| 05. | 3 | 25. | 3 |
| 06. | 1 | 26. | 2 |
| 07. | 1 | 27. | 1 |
| 08. | 4 | 28. | 2 |
| 09. | 2 | 29. | 1 |
| 10. | 2 | 30. | 2 |
| 11. | 1 | 31. | 3 |
| 12. | 2 | 32. | 3 |
| 13. | 4 | 33. | 4 |
| 14. | 3 | 34. | 1 |
| 15. | 2 | 35. | 2 |
| 16. | 1 | 36. | 4 |
| 17. | 3 | 37. | 1 |
| 18. | 4 | 38. | 3 |
| 19. | 4 | 39. | 1 |
| 20. | 2 | 40. | 1 |

**அட்டவணை 05**

ஒரு விடைக்கு 02 புள்ளிகள் வீதம் மொத்தமாக 80 புள்ளிகள்

வினாத்தாள் **I** இற்கான இறுதிப் புள்ளிகள் $= \frac{80}{2} = \mathbf{40}$

2.1.4 வினாத்தாள் I இற்கு விடையளித்த விதம் பற்றிய அவதானிப்பு (பாடப்பரப்புக்கேற்ப)



| பாடப்பரப்பு | வினாக்களின் எண்ணிக்கை | இலகுத்தன்மை கூடிய வினா இலக்கமும் அதன் இலகுத்தன்மையும் | இலகுத்தன்மை குறைந்த வினா இலக்கமும் அதன் இலகுத்தன்மையும் |
|---|---|---|---|
| இலங்கை வரலாறு | 31 | 01, 17 - 82% | 10 - 30% |
| உலக வரலாறு | 9 | 33 - 71% | 34, 40 - 49% |




2017 ஆம் ஆண்டு வரலாறு வினாத்தாள் I இனைத் தயாரிக்கும்போது இலங்கை வரலாற்றுப்பகுதிக்கு 31 வினாக்களும் உலக வரலாற்றுப் பகுதிக்கு 09 வினாக்களும் உள்ளடக்கப்பட்டன. இலங்கை வரலாற்றின் மொத்த இலகுதன்மை 59% ஆகும். உலக வரலாற்றின் மொத்த இலகுதன்மை 64% ஆகும்.

இலங்கை வரலாற்றுப் பகுதியின் மொத்த இலகுதன்மையில் தரம் 6 - 11 வரை சித்திரம், வரலாறு ஆகிய பாடங்களில் இடம்பெற்ற விடயங்கள் குத்தாகவும் கிடையாகவும் ஒருங்கிணைந்து வளப்படுத்துவனவாக இருந்தமை நன்மையளிப்பதாக அமைந்திருந்தது. குறிப்பாக அறிவை அடிப்படையாகக் கொண்ட வினாக்களின் இலகுதன்மை உயர்வானதாகக் காணப்பட்டன. இலங்கையின் அமைவிடம், வரலாற்றுக்கு முந்திய இடங்கள் முன் வரலாற்றுக்குரிய இடங்கள் ஆரம்ப வரலாற்று இடங்கள் பொருளாதார, சமய சமூக நிகழ்வுகள் அவற்றுடன் தொடர்புடைய அரசர்கள் அவர்கள் பற்றிய தகவல்கள் பெறக்கூடிய மூலாதாரங்கள் தேசிய செயற்பாடுகள் அவற்றுடன் தொடர்புடைய தலைவர்கள் ஆகிய தலைப்புகளினூடாக ஆராய்ந்தறியும் அறிவை அடிப்படையாகக் கொண்டு வினாக்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

உலக வரலாறு தொடர்பான வினாக்களின் இலகுதன்மை 64% ஆகும். ஐரோப்பாவில் மறுமலர்ச்சி ஏற்படுதல் அதில் தாக்கம் செலுத்திய காரணிகள் இலங்கையில் மறுமலர்ச்சி ஏற்படுத்திய தாக்கம், தொழில் புரட்சி, தொழில் புரட்சியின் முக்கிய விளைவுகள் இப்புரட்சி இலங்கையில் ஏற்படுத்திய தாக்கம் உலகில் முக்கியத்துவம் பெற்ற புரட்சிகள் உலக மகா யுத்தங்கள் மகாநாடுகள் அவற்றின் விளைவுகள் என்பன இப்பகுதியில் அடங்கியுள்ளன. உலக வரலாற்றின் பல்வேறு நிகழ்வுகள் இலங்கையின் சமூக பொருளாதார அரசியல் வரலாற்றில் பல்வேறு சந்தர்ப்பங்களில் தாக்கம் செலுத்திய விதம் பற்றிய பரிசீலனை இலகுதன்மையில் தாக்கம் செலுத்தியுள்ளது.

2.1.5 வினாத்தாள் I இல் ஒவ்வொரு வினாவுக்குமுரிய விடைத் தெரிவுக்கான துலங்கலை வழங்குவதில் மாணவர் சதவீதம்

| வினா இலக்கம் | சரியான தெரிவு | ஒவ்வொரு தெரிவும் செய்யப்பட்ட மாணவர் சதவீதம் | | | | விடையளிக்கவில்லை |
|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | |
| 1 | 2 | 15.7% | **81.5%** | 1.4% | 1.4% | 0.1% |
| 2 | 3 | 19.2% | 3.5% | **58.5%** | 18.6% | 0.2% |
| 3 | 3 | 22.3% | 6.1% | **43.1%** | 28.2% | 0.3% |
| 4 | 4 | 4.4% | 9.3% | 9.8% | **76.1%** | 0.4% |
| 5 | 3 | 10.8% | 16.4% | **66.1%** | 6.4% | 0.3% |
| 6 | 1 | **67.1%** | 22.8% | 6.2% | 3.8% | 0.2% |
| 7 | 1 | **67.9%** | 11.1% | 9.8% | 11.0% | 0.3% |
| 8 | 4 | 10.7% | 16.2% | 14.1% | **58.4%** | 0.6% |
| 9 | 2 | 18.3% | **66.4%** | 10.5% | 4.5% | 0.3% |
| 10 | 2 | 13.6% | **29.6%** | 45.9% | 10.5% | 0.5% |
| 11 | 1 | **64.7%** | 21.0% | 6.9% | 7.3% | 0.2% |
| 12 | 2 | 9.9% | **67.1%** | 9.5% | 13.2% | 0.3% |
| 13 | 4 | 21.1% | 18.4% | 20.9% | **39.3%** | 0.4% |
| 14 | 3 | 12.1% | 3.4% | **77.7%** | 6.7% | 0.1% |
| 15 | 2 | 16.8% | **72.8%** | 3.9% | 6.2% | 0.3% |
| 16 | 1 | **81.3%** | 6.6% | 6.6% | 5.4% | 0.2% |
| 17 | 3 | 5.7% | 7.9% | **81.8%** | 4.7% | - |
| 18 | 4 | 8.8% | 21.4% | 8.6% | **60.9%** | 0.3% |
| 19 | 4 | 7.8% | 10.9% | 14.5% | **66.5%** | 0.4% |
| 20 | 2 | 24.7% | **60.5%** | 8.1% | 6.5% | 0.3% |
| 21 | 1 | **56.6%** | 17.2% | 19.1% | 7.0% | 0.2% |
| 22 | 3 | 9.0% | 24.3% | **39.6%** | 26.6% | 0.6% |
| 23 | 4 | 17.4% | 14.0% | 19.6% | **48.5%** | 0.4% |
| 24 | 4 | 13.9% | 19.5% | 17.0% | **49.2%** | 0.3% |
| 25 | 3 | 25.6% | 26.9% | **39.2%** | 8.1% | 0.2% |
| 26 | 2 | 9.3% | **66.3%** | 12.2% | 12.0% | 0.3% |
| 27 | 1 | **63.2%** | 12.0% | 16.1% | 8.4% | 0.3% |
| 28 | 2 | 14.1% | **48.3%** | 23.4% | 13.7% | 0.6% |
| 29 | 1 | **75.7%** | 7.2% | 12.0% | 4.8% | 0.3% |
| 30 | 2 | 20.6% | **42.5%** | 15.9% | 20.5% | 0.7% |
| 31 | 3 | 11.7% | 19.4% | **62.7%** | 5.9% | 0.3% |
| 32 | 3 | 10.2% | 9.2% | **68.2%** | 12.3% | 0.2% |
| 33 | 4 | 9.5% | 7.9% | 11.5% | **70.8%** | 0.3% |
| 34 | 1 | **49.3%** | 14.6% | 20.4% | 15.3% | 0.4% |
| 35 | 2 | 11.5% | **56.0%** | 18.5% | 13.7% | 0.3% |
| 36 | 4 | 9.9% | 11.4% | 28.3% | **50.0%** | 0.5% |
| 37 | 1 | **58.9%** | 7.4% | 27.5% | 5.9% | 0.4% |
| 38 | 3 | 12.2% | 15.7% | **52.6%** | 19.2% | 0.3% |
| 39 | 1 | **55.8%** | 15.4% | 9.0% | 19.7% | 0.2% |
| 40 | 1 | **49.2%** | 15.3% | 14.1% | 21.1% | 0.3% |

**அட்டவணை 06**

ஒவ்வொரு வினாவிற்கும் சரியான விடையைத் தெரிவு செய்த மாணவர் சதவீதம் நிழற்றிக் காட்டப்பட்டுள்ளது.

### 2.1.6. வினாத்தாள் I இற்கு விடையளித்தல் தொடர்பான முழுமையான அவதானிப்பும் முடிவும் ஆலோசனைகளும் :

2017 ஆம் ஆண்டு வினாத்தாள் 1 இனைத் தயாரிக்கும்போது இலங்கை வரலாற்றுப் பகுதிக்கு 31 வினாக்களும் உலக வரலாற்றுப் பகுதிக்கு 09 வினாக்களும் உள்ளடக்கப்பட்டுள்ளன.

வினாத்தாள் I இல் 60% இற்கும் கூடிய இலகுதன்மை கொண்ட வினாக்களின் எண்ணிக்கை 21 ஆகும். இதில் இலங்கை வரலாற்றில் 19 உம் உலக வரலாற்றில் 02 உம் அடங்கியுள்ளன. இலங்கை வரலாற்றுப் பகுதியில் 1, 16, 17 ஆகிய வினாக்களின் இலகுதன்மை 80% இனை விட கூடியதாகும். 1 ஆம் வினா நாட்டின் இலக்கிய மூலாதாரம் பற்றியதும் 16 ஆம் வினா புராதன விஞ்ஞான தொழினுட்பம் பற்றியதும் 17 ஆம் வினா ஆரம்ப வரலாற்று யுகம் பற்றியதும் ஆகும். இவ்வினாக்களுடன் தொடர்பான விடயங்களை உறுதிப்படுத்துவதில் பாடநூல் பயன்பாடு ஆசிரியர்களால் பயன்படுத்தப்பட்ட ஆக்கத்திறனுடைய கற்றல் கற்பித்தல் முறைகள் என்பன பாட அறிவை உறுதிப்படுத்த உதவியுள்ளதெனலாம்.

இலங்கை வரலாற்றில் குறைந்த இலகுதன்மையான 40% இனை வினா 10, 13, 25 என்பன மட்டுமே காட்டுகின்றன. இவற்றில் ஆகக்குறைந்த இலகுதன்மையை காட்டுவது 10 ஆம் வினா ஆகும். இது 30% ஆகும். ஆரம்ப வரலாற்றுக் காலத்தின் இலங்கையின் குடியேற்றங்கள் பற்றியதாகும். குடியேற்றங்களின் பரம்பல் அவற்றின் வலயங்கள் பற்றிய விளக்கங்களை மாணவர்களிடம் மேலும் மேம்படுத்த வேண்டும். இங்கு பாடநூலைப் பயன்படுத்துவதில் கவனம் செலுத்த வைத்தல், நதிக்கரையோரங்களின் அருகில் குடியேற்றங்கள் ஆரம்பமாதல் பற்றிய அறிவை உறுதிப்படுத்துவதற்கு பல்வேறு ஆக்கத்திறனுடைய கற்பித்தல் முறைகளைப் பயன்படுத்துதல் என்பவற்றால் அடைவு மட்டத்தை அதிகரிக்க முடியும் என எடுத்துக்காட்டலாம்.

வினாத்தாள் I இன் உலக வரலாற்றுப் பகுதியில் அடங்கிய 09 வினாக்களில் இலகுதன்மை 50% இற்கும் கூடிய வினாக்களின் எண்ணிக்கை 06 ஆகும். இவற்றில் அதிக இலகுதன்மையைக் காட்டுவதாக 33 ஆம் வினா உள்ளதுடன் மாணவர்களில் 71% ஆனோர் சரியான விடையைத் தெரிவு செய்திருந்தனர். 34 ஆம் 40 ஆம் வினாக்கள் இரண்டும் 49% ஆக குறைந்த இலகுதன்மையைக் கொண்டுள்ளன. இவ்வினாக்களுக்குச் சரியான விடையை 49% மாணவர்களே தெரிவுசெய்திருந்தனர். இங்கு பாடம் தொடர்பான அறிவை மேம்படுத்துவதுடன் வினாக்கள் தயாரிக்கப்படும் பல்வேறு வகைகள் பற்றியும் பயிற்சிகளை வழங்குதல் அவசியமாகும்.

வினாத்தாள் I இன் உலக வரலாற்றுப் பகுதியை பகுப்பாய்வு செய்யும்போது 71% எல்லைக்குள் இலகுதன்மையை வினா 33 மட்டுமே காட்டியது. ஏனைய அனைத்து வினாக்களும் 49% இலிருந்து 59% வரையான இடைவெளியில் இலகுதன்மை காட்டியுள்ளமை முக்கியமானதாகும். மேற்குறிப்பிட்ட வினாக்கள் தரம் 11 பாடநூலில் உலகின் முக்கிய புரட்சிகள், உலக மகாயுத்தங்கள், உடன்படிக்கைகள் என்பன பற்றிய கடைசிப் பாடத்திலிருந்து தயாரிக்கப்பட்டுள்ளன. இவ்விடயத் தலைப்புப் பற்றி ஆசிரியர்களும் மாணவர்களும் அதிக கவனம் செலுத்துவது அவசியமாகும்.

வினாத்தாள் I இல் உயர்ந்த அடைவு மட்டத்தைப் பெறுவதற்கு கற்றல் - கற்பித்தலின்போது பாட விடயங்களுடன் தொடர்புடைய படங்கள், சம்பவங்கள் பற்றிய காட்சிகள், தேசப்படங்கள், அட்டவணைகளைப் பயன்படுத்துதல், விடயங்களுடன் தொடர்பான தலைப்புகளில் களப்புத்தகங்கள் தயாரித்தல், குறு வினாக்கள் தயாரித்தல், அரசர்களின் ஆட்சிக்காலம், அவை தொடர்பான சம்பவங்கள் என்பவற்றை அட்டவணைப்படுத்தல், வினா விடைப் போட்டிகள் நிகழ்த்துதல், பாத்திரமேற்று நடித்தல், மகிழ்ச்சியான கற்றல் சூழலை ஏற்படுத்தல் ஆகிய செயற்பாடுகளை மேற்கொள்ளலாம்.

வரலாற்று மற்றும் தொல்பொருளியல் படங்களைப் பார்வையிட்டு ஆய்வு செய்வதற்காக திட்டமிட்ட முறையிலான களப்பயணம், முன்பயிற்சி மகாநாடுகள் நடத்துதல், அறிவாளர் கலந்துரையாடல், கண்காட்சிகள், பாடத்துக்கான தினத்தை ஒழுங்கு செய்தல், முக்கியமான நிகழ்வுகளை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துதல் போன்றவற்றின் மூலம் உயர்வான அடைவுமட்டத்தை அடைய முடியும்.

வரலாற்றுப் பாடத்தை கற்பிக்கும் ஆசிரியர்கள் தமது அறிவை வளர்த்துக்கொள்வதுடன் இற்றைப்படுத்திக் கொள்வதற்கு பயிற்சிக்கான சந்தர்ப்பங்களில் பங்குகொள்ளல், கலைத்திட்டத்தை கற்றுக்கொள்ளல் நூல்களை வாசித்தல், புதிய கற்றல் - கற்பித்தல் முறைகளைப் பயன்படுத்துதல், புதிய தொழினுட்பங்களைப் பயன்படுத்துவதில் ஈடுபடுதல் ஆகியவை பாடத்தின் நோக்கத்தை அடைவதற்கு உதவுவனவாகும்.

## 2.2 வினாத்தாள் II இற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான விபரங்கள்

### 2.2.1 வினாத்தாள் II - கட்டமைப்பு

வினாத்தாள் II - நேரம் 03 மணித்தியாலம். மொத்தப்புள்ளிகள் 120

இது I, II, III என மூன்று பகுதிகளைக் கொண்டது.

பகுதி I

முதலாம் வினா கட்டாய வினாவாகும். இது (அ), (ஆ) என இரு பகுதிகளைக் கொண்டது.

பகுதி (அ) - தேசப்படத்தில் குறித்துப் பெயரிடுதல். 18 புள்ளிகள்

பகுதி (ஆ) - வரலாற்று நிகழ்வுகளும் படங்களும் தொடர்பான மூன்று பகுதிகளைக் கொண்டது. புள்ளிகள் 12

18 + 12 = 30 புள்ளிகள்

பகுதி II

கட்டமைப்பு, பகுதிக் கட்டமைப்பு, கட்டுரை வகை வினாக்கள் 6 இனைக் கொண்டுள்ளது. இவற்றுள் 4 வினாக்களுக்கு விடையளித்தல் வேண்டும். இவ்வினாக்கள் தேர்ச்சி மட்டங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள பாட வேளைகளின் எண்ணிக்கைக்கு ஏற்றதாக பின்வரும் பாட அலகுகளிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ளன.

தரம் 10 - 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 10

தரம் 11 - 2, 3, 4, 5, 6

18 × 4 = 72 புள்ளிகள்

பகுதி III

கட்டமைப்பு, பகுதிக்கட்டமைப்பு கட்டுரை வகை வினாக்கள் 2 இனைக் கொண்டுள்ளது. இவற்றினுள் ஒன்றிற்கு விடையளித்தல் வேண்டும். இவ்வினாக்கள் தேர்ச்சி மட்டங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள பாட வேளைகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப பின்வரும் பாட அலகுகளிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ளன.

தரம் 10 - 9

தரம் 11 - 1, 7, 8

18 × 1 = 18 புள்ளிகள்

**இறுதிப் புள்ளியைக் கணித்தல் :**

வினாத்தாள் I = 80

வினாத்தாள் II = 120

இறுதிப் புள்ளி = 200 ÷ 2 = 100

.

2.2.2 வினாத்தாள் II - எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகளும், முடிவுகளும், ஆலோசனைகளும் :

| வினாத்தாள் II இற்கு விடையளித்தமை தொடர்பான அவதானிப்பு வரைபு 2, 3, 4.1, 4.2, 4.3 என்ற முறையில் முன்வைக்கப்பட்டுள்ளது. வினாவுக்குரிய வரைபு, உரிய வினாக்களின் அவதானிப்பு, முடிவுகள் என்பவற்றுடன் காட்டப்பட்டுள்ளது. |
|---|

## பகுதி I

வினா இலக்கம் 1

**1.** **(அ)** கீழே (i) இல் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** தரப்பட்டுள்ள இலங்கைப் புறவுருவப்படத்திலும் (ii) இல் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** தரப்பட்டுள்ள உலகப் புறவுருவப்படப் பகுதியிலும் குறித்துப் பெயரிடுக.

(i) கிரிந்தி ஓயா, இரணைமடுக் குளம், தேவநகரம், சல்வத்தொட்ட, கந்தரோடை (கந்துருகொட), சொரபொர வாவி, கன்னொருவை, ஸ்ரீ ஜயவர்த்தனபுரக் கோட்டை, கலா ஓயா, பெட்ரிக் கோட்டை, பொம்பரிப்பு, காலித் துறைமுகம் (12 புள்ளிகள்)

(ii) மும்பை (பம்பாய்), செங்கடல், உரோமாபுரி, மலாயா தீபகற்பம், யப்பான் தீவுகள், போர்த்துக்கல் (06 புள்ளிகள்)

**(ஆ)** (i) கீழே $A, B, C$ மற்றும் $D$ ஆகியவற்றில் தரப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தகவல்களுக்குரிய விடைகளை ஒழுங்குமுறைப்படி உங்கள் விடைத்தாளில் எழுதுக.

$A$ - ஐரோப்பியரின் வருகைக்கு முன்னர் இந்து சமுத்திரத்தின் வர்த்தகத்தில் ஆதிக்கம் செலுத்திய இனம்

$B$ - போர்த்துக்கேயரை இந்நாட்டிலிருந்து விரட்டுவதற்கு கடற்படைப் பலமுள்ள வெளிநாட்டு இனத்தவரின் உதவியைப் பெற்றுக் கொண்ட மலைநாட்டு மன்னர்

$C$ - கல்பொத்த கல்வெட்டைச் செதுக்கிய பொலன்னறுவை ஆட்சியாளர்

$D$ - இரண்டாம் உலக மகா யுத்தத்தின் போது முதலாவது அணுகுண்டுத் தாக்குதலுக்குட்பட்ட நகரம் (04 புள்ளிகள்)

● $A$ மற்றும் $B$ இனால் கீழ் காட்டப்பட்டுள்ள படங்களை அவதானித்து, தரப்பட்ட வினாக்களுக்கான விடைகளை இலக்கங்களின் ஒழுங்குமுறையில் உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. '$A$' இனால் காட்டப்படும் நிர்மாணிப்பு எது?

2. இதன்மூலம் ஆற்றப்படும் பணி யாது?

3. இதனை எந்த நீர்ப்பாசனக் கட்டுமானத்தை அண்மியதாகக் காணலாம்?

4. இதனை நிர்மாணிப்பதற்குப் பயன்படுத்திய பொருட்களிலொன்றைக் குறிப்பிடுக.

(04 புள்ளிகள்)



$A$

(iii) 1. '$B$' எழுத்தினால் காட்டப்படுவது எது?

2. இது அமைந்துள்ள நகரம் எது?

3. இதனை யாரைத் தங்கவைப்பதற்காகப் பயன்படுத்தினர்?

4. இது உலகின் எந்தப் புரட்சியுடன் தொடர்புபட்டது?

(04 புள்ளிகள்)



$B$

எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளிவழங்கும் திட்டமும்

வினா 1

**(1) (அ) (i)**




**(10** புள்ளிகள்)

**(1) (அ) (ii)**




**(8 புள்ளிகள்)**

(ஆ) **(i)** A - முஸ்லிம்

B - இரண்டாம் இராஜசிங்கன்

C - கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் / நிசங்கமல்லன்

D - ஹிரோஷிமா **(1 x 4 = 4 புள்ளிகள்)**

**(ii)** 1. - மடைக்கதவு / கலிங்கல்

2. - நீரை விடுவித்தல்

3. - குளம் / கலிங்கல் தொட்டி

4. - கருங்கல் / செங்கல் **(1 x 4 = 4 புள்ளிகள்)**

**(iii)** 1. - பஸ்ரீல்

2. - பரீஸ்

3. - சிறைக்கைதிகள்

4. - பிரான்சியப் புரட்சி **(1 x 4 = 4 புள்ளிகள்)**

**1ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




01 ஆம் வினா கட்டாயமானது. எனினும் இவ்வினாவிற்கு விடையளித்திருப்போர் 98.68% ஆகும். இந்த வினாவுக்கான புள்ளிகள் 30 ஆகும்.

00 - 07 ஆயிடையில் 29%
08 - 15 ஆயிடையில் 36%
16 - 22 ஆயிடையில் 24%
23 - 30 ஆயிடையில் 11%
புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 23 புள்ளிகளையோ அதற்கு மேற்பட்ட புள்ளிகளையோ பெற்றவர்கள் 11% ஆவர். 07 புள்ளிகளையோ அதற்குக் குறைந்த புள்ளிகளையோ பெற்றுள்ளோர் 29% ஆவர்.




★ இவ்வினாவில் அதிக இலகுதன்மையை (அ) பகுதியின் (i) C காட்டுவதுடன் அது 74% ஆகும். குறைவான இலகுதன்மையை (ஆ) (iii) 2 பகுதி காட்டுவதுடன் அது 17% ஆகும்.

முதலாம் வினாவில் (அ) பகுதியின் *(i), (ii)* ஆகியவை முறையே இலங்கைத் தேசப்படம், உலகத் தேசப்படம் பற்றியவை ஆகும். இதன் இலகுதன்மை முறையே 34% உம் 42% உம் ஆகும். இதற்குக் காரணம் தேசப்படத்தில் குறித்துப் பெயரிடும்போது செய்முறை அனுபவம் பயன்படுத்தப்படாமையும் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி நூலைச் சரியாகப் பயன்படுத்தாமையும் ஆகும். கற்றல் கருவியாக வகுப்பறையில் பல்வேறு தேசப்படங்களைக் காட்சிப்படுத்துவதுடன் சரியான தேசப்படங்களை வழங்கி சரியாக இடங்களைக் குறித்துப் பெயரிடுவதற்கு பழக்கப்படுத்துதல் வேண்டும். நாடுகளின் முன்னைய பெயர்கள் தற்போதைய பெயர்கள் அறிதல் தேசப்படத்தில் இடங்களை வெவ்வேறாகக் குறித்துப் பெயரிடுதல் என்பன மூலம் கூடிய இலகுதன்மையை அடைய முடியும்.

(ஆ) *(i)* வரலாற்றுப் படங்களுடன் தொடர்புடைய 1, 4 என்பன முறையே 68% இலகுதன்மை பெற்றிருப்பதுடன் 3, 4 என்பன முறையே 59%, 41% இலகுதன்மையைக் காட்டுகின்றன.

(ஆ) *(ii)* பகுதியில் *A, B, C, D* என்பவற்றில் முறையே 27%, 38%, 74%, 54% இலகுதன்மை மட்டம் காணப்படுகின்றது. இங்கு *C, D* என்பவற்றில் இலகுதன்மை உயர்வாகக் காணப்படுவதற்கு வேறு பாடங்களிலும் கீழ் வகுப்புகளில் பெற்ற அறிவும் உதவியுள்ளன எனலாம்.

(ஆ) *(iii)* உலக வரலாற்றுக்குரிய வினா 1, 3, 4 என்பன 50% இற்கும் கூடிய இலகுதன்மையைக் காட்டுகின்றன. இதற்குக் காரணம் படங்களைக் கற்றலை பொருத்தமாகப் பயன்படுத்தியமையாகும்.

பாடங்களுடன் தொடர்புடைய உருக்கள் / படங்களின் சிறப்பம்சங்களை இனங்கண்டு அவை பற்றி ஒவ்வொரு நாளும் பாடப்பிரவேசமாக உரிய படங்களை அறிமுகப்படுத்துதல், உருக்கள் படங்கள் என்பவற்றை வகுப்பறையில் காட்சிப்படுத்துதல் ஆகியவை மூலம் கூடிய இலகுதன்மையைப் பெற முடியும். சுவர்ப்பத்திரிகைகளை வாரந்தோறும் காட்சிப்படுத்துதல் தரம் 10, 11 பாடத்திட்டத்திற்குரிய உருக்கள் படங்கள் அடங்கிய சிறுகையேடு தயாரித்து உரிய விடயங்களை உள்ளடக்குவதனூடாக கூடிய இலகுதன்மையைப் பெறலாம்.

இவ்வினாவின் இலகுதன்மையை மேலும் மேம்படுத்த எப்போதும் ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் இடையிடையே வரலாற்று இடங்களைத் தேசப்படத்தில் குறித்துப் பெயரிடுதல், தேசப்பட அப்பியாசப் புத்தகம் படப் புத்தகம் என்பவற்றை பயன்படுத்துவதற்குச் சந்தர்ப்பம் வழங்குதல் என்பன பொருத்தமானவையாகும். இது தவிர கட்புல செவிப்புல சாதனங்களையும் பயன்படுத்த முடியும்.

# பகுதி II

**வினா 2**

தேர்ச்சி : இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட கால, முன் வரலாற்றுக்கால குடியேற்றங்களின் பரம்பல், வாழ்க்கை முறை, தொழில்நுட்பம் போன்ற தகவல்களை எடுத்துக் கூறுவர்.

**2.** (i) இலங்கையின் தென்மாகாணத்திற்குரிய குறைவரல் வலயத்தில் வரலாற்றுக்கு முற்பட்ட கல்லாயுதங்கள் கிடைக்கப்பெற்றுள்ள இடங்கள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் வாழ்க்கை முறையின் முக்கியமான பண்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) (a) முன் வரலாற்றுக் காலம் எனக் கருதப்படுவது எந்தக் காலப்பகுதியாகும்?

(b) இலங்கையின் முன் வரலாற்றுக் காலத்திற்குரிய மயானங்கள் அமைந்துள்ள இடங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக. (05 புள்ளிகள்)

(iv) முன் வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்த மனிதன் தொழினுட்பத்தைப் பயன்படுத்திய விதத்தை **மூன்று** காரணிகளை முன்வைத்து விளக்குக. (06 புள்ளிகள்)

**2. (i)**
- மினிஹா கல்கந்தை
- பூந்தலை
- பதிராஜவெல
- அலுகல்கே
- உடமலல

(1 x 3 = 3 புள்ளிகள்)

**(ii)**
- மிருகங்களை வேட்டையாடுதல்.
- உணவுக்காக காட்டு காய்கனிகளை சேகரித்தல்.
- உணவு இயற்கைச் சூழலுக்கு அமைவாக தீர்மானமானவை.
- சிறு குழுக்களாக வாழுதல்.
- மழைகாலங்களில் குகைகளிலும் வரட்சிக் காலங்களில் திறந்த வெளிகளிலும் வாழுதல்.
- சடலங்களை கற்குகைகளில் புதைத்துள்ளனர் / குழியைத் தோண்டி சடலத்தை வைத்து சருகுகளால் மூடியுள்ளனர்.
- நாளாந்த நடவடிக்கைகளுக்காக பல்வகையான உபகரணங்கள் பயன்படுத்தப்பட்டமை.

(2 x 2 = 4 புள்ளிகள்)

**(iii) (a)**
- வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தின் இறுதிப்பகுதிக்கும் வரலாற்றுக் காலத்தின் ஆரம்பப் பகுதிக்கும் இடைப்பட்ட காலம்.

(கி.மு 2400 - கி.மு 450க்கு இடைப்பட்ட காலம்)

**(b)**
- ரஞ்சாமடம
- இப்பன்கடுவை
- கல்சொஹுன் கனத்தை
- யடிகல் பொத்தை
- ஹல்துமுல்ல
- பெரகல

(2 + 3 = 5 புள்ளிகள்)

**(iv)**
- மட்பாண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்நுட்பம்.
- உலோக தொழில்நுட்பம்
- வீடுகளைக் கட்டுவதற்காக தொழில்நுட்பங்களை பயன்படுத்தல்.
- ஆபரணங்கள், அலங்காரப் பொருட்கள் பயன்படுத்தப்பட்டமை.
- கல்லறைகளை நிர்மாணிக்கும் போது தொழில் நுட்பங்களைப் பயன்படுத்தியமை.

(3 + 3 = 6 புள்ளிகள்)

**2ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




02 ஆம் வினாவைத் தெரிவு செய்தோர் 91.70% ஆகும். இந்த வினாவுக்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 29%
05 - 09 ஆயிடையில் 33%
10 - 13 ஆயிடையில் 23%
14 - 18 ஆயிடையில் 15%
புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 அல்லது அதற்குக் கூடிய புள்ளிகளைப் பெற்றோர் 15% ஆவர். 04 அல்லது அதற்குக் குறைந்த புள்ளிகளைப் பெற்றோர் 29% ஆவர்.




★ இவ்வினாவுக்குரிய 5 உபபிரிவுகளில் இலகுதன்மை கூடிய உபபிரிவு *(ii)* ஆகும். அது 72% இலகுதன்மை குறைந்தது *(i)* என்பதுடன் அதன் இலகுதன்மை 22% ஆகும்.

இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதர் பயன்படுத்திய ஆயுதங்கள் அவர்களின் வாழ்க்கைக் கோலத்தின் முனைப்பான பண்புகள், முன் வரலாற்றுக் காலத்தில் பயன்படுத்திய தொழினுட்பங்கள் மரணச் சடங்குகள் என்பன பற்றிய அறிவையும் விளக்கத்தையும் பரீட்சிப்பதற்காக இந்த வினா தயாரிக்கப்பட்டுள்ளதுடன் அதனைத் தெரிவு செய்த மாணவர்கள் 91.70% ஆகும்.

*(i)* பகுதியின் இலகுதன்மை 22% ஆகும். கூடிய இலகுதன்மையைப் பெறுவதற்கு இலங்கைப் படம் ஒன்றில் வரலாற்றுக்கு முற்பட்ட இடங்களைக் குறித்துப் பெயரிடுதல், அட்டவணை மூலம் இடங்களை வேறுபடுத்தி இனம்காணச் செய்தல் என்பவற்றால் மாணவர்களுக்கு வழிகாட்ட முடியும். *(ii)* ஆம் வினாவின் இலகுதன்மை 72% ஆகும். பாடநூலைப் பயன்படுத்துவதில் மாணவர்களை ஈடுபடுத்துவதுடன் குழுச் செயற்பாடு, சுவர்ப்பத்திரிகை ஆகியவை மூலம் தகவல்களைக் காட்சிப்படுத்துவதினூடாக இலகுதன்மையை மேலும் விருத்தி செய்ய முடியும்.

பகுதி *(iii)* இன் *(a), (b)* உபபிரிவுகளின் இலகுதன்மை முறையே 34%, 42% ஆகும். முன் வரலாற்றுக் காலத்துக்குரிய காலப்பகுதி அக்காலத்தில் மயானங்கள் அமைந்த இடங்கள் என்பவற்றை குழுச் செயற்பாடுகள், ஒப்படைகள் என்பவற்றைப் பயன்படுத்துவதன் மூலம் கூடிய இலகுதன்மையை மாணவர் அடைவதற்கு ஈடுபடுத்தலாம்.

பகுதி *(iv)* இற்கு விடை வழங்குவதற்கான இலகுதன்மை 49% ஆகும். முன்வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்த மனிதர் தொழினுட்பத்தைப் பயன்படுத்திய விதத்தினை களப்பயணம், உரிய உருக்கள் என்பவற்றைப் பயன்படுத்துதல் இலகுதன்மையை பெற்றுக்கொள்ள முடியும்.

## வினா 3

தேர்ச்சி : அரசுக்கு முற்பட்ட கால அரச அதிகாரிகள் அழைக்கப்பட்ட விதம், புரதான இலங்கை நிர்வகிக்கப்பட்ட முறை, பொருளாதாரம், அரசாட்சிக்குப் பின் ஆட்சி செய்த முக்கிய அரசர்கள் தொடர்பான விடயங்களை முன்வைப்பர்.

**3.** (i) இலங்கையின் அதிகாரம் மையப்படுத்தப்பட்ட நிருவாகத்திற்குரித்தான பின்வரும் பணிகளையும் அப்பணிகளுடன் தொடர்புடைய நபர்களின் உத்தியோகபூர்வப் பெயர்களையும் அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறைப்படி எழுதுக.

*A* - காசு அச்சிடும் பிரிவின் தலைவர்
*B* - குதிரைப் பிரிவின் தலைவர்
*C* - வர்த்தக நடவடிக்கைகளுக்கான தலைவர்

(ரூப அதெக, பன அதெக, நகர வடிக, நட்ட அதெக, அச அதெக) (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் விடயங்கள் ஒவ்வொன்றுடனும் தொடர்புடைய ஆட்சியாளர்கள் யார் என்பதை ஒழுங்குமுறைப்படி எழுதுக.

*A* - தனது மாமன்மாரை வென்று அரச பதவியைக் கைப்பற்றுதல்
*B* - இலங்கையின் வரலாற்றில் முதற்றடவையாக ஒழுங்கமைக்கப்பட்ட யுத்தத்தில் வெற்றிபெற்று ஐக்கிய இலங்கையை உருவாக்குதல்
*C* - அதிகளவு குளங்களை நிர்மாணித்தலில் முன்னிலை வகித்தல்
*D* - பாண்டிய வம்சத்தின் உதவியுடன் பொலன்னறுவையில் மூன்று முறை அதிகாரத்திற்கு வந்த அரசியாதல் (04 புள்ளிகள்)

(iii) புராதன இலங்கையில் கிராமங்கள் நிருவகிக்கப்பட்ட விதத்தை அவற்றின் தலைமைத்துவம் மற்றும் பணிகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) புராதன இலங்கையின் பொருளாதாரத்தில் தேசிய மற்றும் வெளிநாட்டு வர்த்தகம் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தமை பற்றி **மூன்று** காரணிகளை முன்வைத்து விளக்குக. (06 புள்ளிகள்)

**3.** **(i)** *A* - ரூப அதெக

*B* - அச அதெக

*C* - பன அதெக (1 x 3 = 3 புள்ளிகள்)

**(ii)** *A* - பண்டுகாபய மன்னன்

*B* - துட்டகைமுனு மன்னன்

*C* - வசப மன்னன் / மகாசேன மன்னன்

*D* - லீலாவதி அரசி (1 x 4 = 4 புள்ளிகள்)

**(iii)**
- தலைமைத்துவம்
  - கிராமத்தின் தலைவர் கமிக எனும் பெயரால் அறிமுகமாயினர்.
  - குருகபதிகளில் இருந்து கமிக தெரிவு செய்யப்பட்டமை.
  - கிராமத்தில் வாழ்ந்த செல்வமும் பலமும் படைத்த ஒருவர் கமிகவாக தெரிவு செய்யப்பட்டமை.

- பணிகள்
  - கிராமப் பொது நிகழ்வுகளுக்கு தலைமை தாங்குதல்
  - குளத்தை நிர்வகித்தல்.
  - நீரை விநியோகித்தல்.
  - கிராமத்தவர்களிடையே ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்த்தல்.
  - கிராமங்களிடையே இணக்கப்பாட்டையும் நட்புறவையும் ஏற்படுத்துதல்.

(2 + 2 + 1 = 5 புள்ளிகள்)

**(iv)**
- தேசிய வர்த்தகம்
  - முறைப்படுத்தப்பட்ட உள்நாட்டு வியாபாரம்
  - உள்நாட்டு சந்தைகள் காணப்பட்டமை
  - வர்த்தக சட்டங்கள் காணப்பட்டமை.
  - வணிக பொருட்கள்
  - வரி அறவிடப்பட்டமை

- வெளிநாட்டு வர்த்தகம்
  - வெளிநாட்டு வணிக நிறுவனங்கள்
  - வணிக தொடர்புகளை வைத்திருந்த நாடுகள்
  - வணிக துறைமுகங்கள்
  - பரிமாற்றம் செய்யப்பட்ட பொருட்கள்
  - தீர்வை வரிகள் அறவிடப்பட்டமை.

(3 + 3 = 6 புள்ளிகள்)

**3ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




03 ஆம் வினாவை 89.97% மாணோர் தெரிவு செய்துள்ளனர். இந்த வினாவுக்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 22%
05 - 09 ஆயிடையில் 33%
10 - 13 ஆயிடையில் 25%
14 - 18 ஆயிடையில் 20%

புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 புள்ளிகள் அல்லது அதற்கு மேலான புள்ளிகளைப் பெற்றுள்ளோர் 20% ஆகும். 22% ஆனோர் பெற்ற புள்ளிகள் 04 அல்லது அதற்குக் குறைவானதாகும்.




- இவ்வினாவுக்குரிய பிரிவுகள், உபபிரிவுகள் 9 இல் இலகுதன்மை கூடியதாக (i) B இருப்பதோடு அது 90% ஆகும். இலகுதன்மை குறைந்ததாக பிரிவு (iv) இருப்பதுடன் இது 39% ஆகும்.

இலங்கையில் மையப்படுத்தப்பட்ட அரச நிர்வாகத்துடன் தொடர்புடைய பதவிகள் அவற்றுடன் இணைந்த பணிகள், முக்கியத்துவம் வாய்ந்த அரசர்கள், கிராம நிர்வாகம் நிகழ்ந்த முறை, உள்நாட்டு வெளிநாட்டு வர்த்தகம் பற்றிய அறிவு விளக்கம் பற்றி பரீட்சித்தலே இவ்வினாவில் எதிர்ப்பார்க்கப்பட்டவையாகும்.

பிரிவு (i) இல் கூடிய இலகுதன்மையை (i) B உபபிரிவு காட்டுகின்றது. அது 90% ஆகும். A, C என்பன முறையே 69%, 46% இலகுதன்மையைக் காட்டுகின்றன.

பிரிவு (ii) இன் அனைத்து உபபிரிவுகளும் 50%இற்கு மேற்பட்ட இலகுதன்மையைப் பெற்றுள்ளன.

பிரிவு (iii), (iv) என்பன முறையே 56%, 39% இலகுதன்மையைக் காட்டுவதுடன் இதனை அதிகரிப்பதற்கு சுவர்ப் பத்திரிகைகள் ஆக்குதல், புராதன வர்த்தகம் பற்றிய உருக்களைக் காட்சிப் படுத்தல் ,அரசர்களின் பாத்திரமேற்று நடித்தல், புராதன வர்த்தகம் பற்றியதான கல்வெட்டுகள் அவற்றின் முக்கியத்துவம் பற்றி அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்தல் போன்ற வழிமுறைகளைப் பயன்படுத்த முடியும்.

**வினா 4**

தேர்ச்சி : இலங்கையின் புராதன விஞ்ஞான பிரயோகத்தின் நீர் முகாமைத்துவம் இரும்பைப் பிரித்தெடுக்கும் தொழில்நுட்பம் போன்ற துறைகளில் காணப்பட்ட வளர்ச்சி பற்றி எடுத்துக் கூறுவர்.

**4.** (i) அனுராதபுர காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட பெரிய குளங்கள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் $A, B, C$ மற்றும் $D$ எழுத்துக்களின் மூலம் தரப்பட்டுள்ள பண்டைய தொழினுட்பம் மற்றும் அதனுடன் தொடர்பான நிர்மாணிப்புகள் யாவை என்பதை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறைப்படி எழுதுக.

*A* - வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் தமது வேலைகளைச் செய்வதற்குப் பயன்படுத்திய தொழினுட்பக் கருவிகள் அழைக்கப்படும் பெயர்

*B* - மண்பானைகளைத் தயாரிப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட தொழினுட்ப உபகரணம்

*C* - நீர் அமுக்கத்தைச் சமநிலைப்படுத்தி வாய்க்காலுக்கு நீரை விடுவிக்கப் பயன்படுத்திய தொழினுட்ப நிர்மாணிப்பு

*D* - நீர்நிலையியல் கோட்பாட்டைப் பயன்படுத்தி மேற்கொள்ளப்பட்ட நிர்மாணிப்பு

(அலைதாங்கி, மடைக் கதவு, வில்லும் அம்பும், வனைதற் சில்லு, கல்லாயுதங்கள், தெடிகம யானை விளக்கு, வான்கதவு, சுற்பிலிகள்) (04 புள்ளிகள்)

(iii) பண்டைய ஆட்சியாளர்கள் பாரியளவு குளங்களைக் கட்டும்போது எதிர்பார்த்த நோக்கங்கள் **இரண்டைச்** சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) (a) பண்டைய இலங்கையில் வளர்ச்சியடைந்த இரும்பு பிரித்தெடுக்கும் தொழினுட்பம் காணப்பட்டதாக தொல்பொருளியல் சான்றுகள் கிடைக்கப்பெற்றுள்ள **இரண்டு** இடங்களைக் குறிப்பிடுக.

(b) அவ்விடத்தில் இரும்பு பிரித்தெடுக்கப்பட்ட விதத்தைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (06 புள்ளிகள்)

**4. (i)**

- மின்னேரியாக் குளம்
- கவுடுளு வாவி
- பதவிய குளம்
- ஹுருளு வாவி
- கலா வாவி
- நாச்சதுவ குளம்
- மகாகணதர வாவி
- மகாவிலச்சிய குளம்
- கிரிதலை குளம்
- கந்தளாய் குளம்

(1 x 3 = 3 புள்ளிகள்)

**(ii)** $A$ - கல்லாயுதங்கள் $B$ - வனைதற் சில்லு

$C$ - மடைக்கதவு (கலிங்கல் தொட்டி) $D$ - தெடிகம யானை விளக்கு

(1 x 4 = 4 புள்ளிகள்)

**(iii)**

- விவசாய நடவடிக்கைகளை வெற்றிகரமாக மேற்கொள்ளல்.
- வெள்ளப்பெருக்கை கட்டுப்படுத்தல்.
- நகர மக்களின் நீர்த்தேவையை நிறைவு செய்தல்.

(2 + 3 = 5 புள்ளிகள்)

**(iv) (a)**

- பலாங்கொடை சமனலவெவ பிரதேசம்
- சீகிரிய - அலகொலவெவ, தெஹிகஹ அலகந்தை பிரதேசம்.

**(b)**

- இரும்புத்தாது படிந்த கற்களை துண்டுகளாக்கி அதனைக் களிமண்ணாலான அடுப்புகளில் இட்டு அதன் மேல் கரியிட்டு மாலை நேரத்தில் தீ மூட்டப்படும். அடுத்த நாள் அதிகாலை வரை வீசும் காற்று மூலம் அவ்வடுப்பு எரிந்து இரும்பைப் பிரித்தெடுக்கும். எரிப்பதற்கு மரங் கரியே பயன்படுத்தப்பட்டுள்ளது.
- இரும்புத் துளை எரிவதற்கான வளி ஊதுளை மூலம் பெற்றுக் கொள்ளப்பட்டது. (தெஹிகஹ அலகந்த)

(2 + 4 = 6 புள்ளிகள்)

**4ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




04 ஆம் வினாவைத் தெரிவு செய்தோர் 90.50% ஆகும். இதற்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 20%
05 - 09 ஆயிடையில் 40%
10 - 13 ஆயிடையில் 25%
14 - 18 ஆயிடையில் 15%
புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 அல்லது அதற்குக் கூடிய புள்ளிகளைப் பெற்றோர் 15% ஆவர். 20% இனர் 04 புள்ளிகள் அல்லது அதற்குக் குறைவான புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.




- ⋆ இவ்வினாவுக்குரிய பிரிவுகள், உபபிரிவுகள் 8 இல் இலகுதன்மை கூடிய உபபிரிவு (ii) *B* ஆவதோடு அது 95% ஆகும். இலகுதன்மை குறைந்த பிரிவு (iv) *B* என்பதோடு அது 32% ஆகும்.

அனுராதபுரக் காலத்தில் கட்டப்பட்ட பெரிய குளங்கள் அவை கட்டப்பட்டதன் நோக்கம், பயன்படுத்தப்பட்ட தொழில்நுட்பம் பற்றிய ஒப்பீட்டு ரீதியான விளக்கத்தைப் பரீட்சிப்பதற்கே இவ்வினா தயாரிக்கப்பட்டுள்ளது.

பிரிவு (i) ஆனது 51% இலகுதன்மையைப் பெற்றுள்ளதுடன் இராசரட்டை நாகரிகத்தில் அனுராதபுரக் காலம் பொலன்னறுவை காலங்களில் நீர்ப்பாசனம் பற்றி வேறு பிரித்து இனங்காண முடியாமையை காணக்கூடியதாயுள்ளது. அநுராதபுரக் காலத்திற்குரிய நீர்ப்பாசனத்தில் பெரிய குளங்களை வேறுபடுத்தி இனங்காணவில்லை. அநுராதபுரக் காலத்தில் கட்டப்பட்ட பெருங்குளங்களைப் பார்வையிடுவதற்கு மாணவர்களை கல்விச் சுற்றுலாவில் பங்குகொள்ளச் செய்தல் அநுராதபுரக் காலத்தின் பெருங்குளங்களை இலங்கைப் படத்தில் குறித்துப் பெயரிடுதல் மூலம் இலகுதன்மையை விருத்தி செய்ய முடியும்.

பிரிவு (ii) இற்குரிய உபபிரிவுகள் கூடிய இலகுதன்மையைக் கொண்டுள்ளன. புராதன காலத்தில் நிலவிய பழமையான தொழினுட்பத்துடன் தொடர்புடைய ஆக்கங்களை இனங்காணுவதற்கு அடைப்புக்குறிக்குள் விடைகளைத் தெரிவு செய்யக்கூடியதாயிருந்தமை கூடிய இலகுதன்மையைப் பெறக் காரணமாகி உள்ளது. மேலும் 6 - 11 தரங்களிலும் இத்தகைய தொழினுட்ப ஆக்கங்கள் பற்றிய அறிவைப் பெற்றுள்ளனர். இந்த உபகரணங்களை சித்திரங்கள், உருக்கள் என்பன மூலம் காட்டுவதனால் இலகுதன்மையை மேலும் விருத்தி செய்ய முடியும்.

பிரிவு (iii) பெற்ற இலகுதன்மையை 57% ஆகும். பண்டைய நீர்ப்பாசன நிர்மாணிப்பு, பெருங்குளங்கள் நிர்மாணிப்புகளில் செல்வாக்குச் செலுத்திய காரணங்களை வெவ்வேறாக இனங்கண்டு எண்ணக்கருப் படம், அட்டவணைப்படுத்தல் மூலம் காட்சிப்படுத்தலின் மூலம் இலகுதன்மையை மேலும் விருத்தி செய்ய முடியும்.

பிரிவு (iv) இன் இலகுதன்மை (a) 39% உம் (b) 32% உம் ஆகும். புராதன இலங்கையில் முன்னேற்றகரமான இரும்பு பிரித்தெடுக்கும் தொழினுட்பம் இருந்ததென்று தொல் பொருளியல் தகவல்கள் கிடைத்துள்ள இரண்டு இடங்கள் குறிப்பாக இனங்காணப்பட்டுள்ளன. இரும்பைப் பிரித்தெடுக்கும் விதத்தினை அட்டவணையில் காட்டுதல் மூலம் அறிவை வழங்க முடியும். புராதன இரும்புக் கைத்தொழிலுடன் தொடர்பான இலத்திரனியல் ஊடாக நிகழ்ச்சிகளைப் பார்வையிடல், அவற்றுடன் தொடர்புடைய அருங்காட்சியகங்களைப் பார்வையிடல் என்பனவற்றின் மூலம் இலகுதன்மையை மேலும் அதிகரிக்கச் செய்யலாம்.

**வினா 5**

தேர்ச்சி : முதலாம் இரண்டாம் நகரமயமாக்கல் காலத்தின் முக்கிய நிர்வாக நகரங்களையும் பொருளாதார கட்டமைப்பில் ஏற்பட்ட மாற்றங்களையும், இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் ஆட்சியின் முக்கியத்துவத்தையும் எடுத்துரைப்பர்.

**5.** (i) இலங்கையின் முதலாவது நகரமயமாக்கல் கட்டத்திற்குரிய பண்டைய நிருவாக நகரங்கள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) முதலாவது நகரமயமாக்கல் கட்டத்திற்குரிய பண்டைய நகர நிருவாகத்தில் செல்வாக்குச் செலுத்திய காரணிகள் **நான்கைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) தம்பதெனியா இராசதானியை ஆட்சி செய்த இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் ஆட்சிக் காலத்தின் முக்கியத்துவத்தை **இரண்டு** காரணிகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) இரண்டாவது நகரமயமாக்கல் கட்டத்தின்போது இலங்கையின் பொருளாதாரக் கட்டமைப்பிலேற்பட்ட மாற்றங்கள் **மூன்றை** உதாரணங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

**5. (i)**
- அநுராதபுரம்
- பொலன்னறுவை
- மாகம
- சீகிரிய

(1 × 3 = 3 புள்ளிகள்)

**(ii)**
- வணிக நடவடிக்கைகள் பரந்துபட்டதாக மாறுதல்.
- நகரத்தின் சனத்தொகை அதிகரித்தல்.
- மத்திய நிருவாகத்தை சக்தி வாய்ந்ததாக கொண்டு வரவேண்டியிருந்தமை.
- அரசர்களின் தேவைப்பாடுகள் ( பண்டுகாபயன் / வசபன் )

(2 × 2 = 4 புள்ளிகள்)

**(iii)**
- மாகனின் ஆக்கிரமிப்பிலிருந்து இலங்கையை விடுவித்தல்.
- சந்திரபானுவை தோற்கடித்தல்.
- தம்பதெனிய கதிகாவத எழுதிவிக்கப்படல்.
- தந்ததாதுவை தம்பதெனியாவுக்கு கொண்டு வரல்.
- விகாரைகள் புனருத்தாரணம்.
- பௌத்த நூல்களை எழுத ஆதரவு வழங்குதல்.
- அரசனே நூல்கள் எழுதியதன் மூலம் இலக்கியத்திற்கு ஆதரவு வழங்குதல்.

(2 + 3 = 5 புள்ளிகள்)

**(iv)**
- பிரதான ஜீவனோபாயம் விவசாயமாக காணப்படுதல்.
- விவசாயத்துக்காக மழைநீரைப் பயன்படுத்தல்.
- பிரதான பயிர்செய்கை நெல் - நீர் பற்றாக்குறையான பிரதேசங்களில் சேனைப்பயிர்ச் செய்கை.
- வர்த்தக நடவடிக்கையில் கூடிய கவனம் செலுத்தியமை.
- உள்நாடு, வெளிநாட்டு வியாபாரம்,
- ஏற்றுமதிப் பயிர்களும், பொருட்களும்
- வெளிநாட்டு வியாபாரத்தில் ஈடுபட்ட நாடுகள்

**(3 + 3 = 6** புள்ளிகள்)

**5ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




05 ஆம் வினாவை 42.73% ஆனோர் தெரிவு செய்திருந்தனர். இவ்வினாவிற்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 37%
05 - 09 ஆயிடையில் 28%
10 - 13 ஆயிடையில் 18%
14 - 18 ஆயிடையில் 17%

புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 புள்ளிகள் அல்லது அதற்கு மேற்பட்ட புள்ளிகளைப் பெற்றோர் 17% ஆகும். 37% ஆனோர் 04 அல்லது அதற்கும் குறைந்த புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.




★ இவ்வினாவுக்குரிய 4 பிரிவுகளில் கூடிய இலகுதன்மை கொண்ட பிரிவு (i) என்பதுடன் அதன் இலகுதன்மை 65% ஆகும். குறைந்த இலகுதன்மை கொண்ட பிரிவு (iv) என்பதுடன் அதன் இலகுதன்மை 27% ஆகும்.

இலங்கையின் முதலாவது நகரமயமாக்கல் கட்டத்துக்குரிய நகரங்களையும் அவை வீழ்ச்சியடைந்தமைக்கான காரணங்களையும் பற்றிய அறிவு, இரண்டாம் நகரமயமாக்கல் கட்டத்தின் மிகச் சிறந்த அரசர்கள் பொருளாதாரப் பாங்கில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றிய ஒப்பீட்டு ரீதியிலான மதிப்பீட்டு ஆற்றலை பரீட்சிப்பதற்காக இவ்வினா தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வினாவைத் தெரிவு செய்தோர் 42.73% ஆகும்.

பிரிவு (i) இன் இலகுதன்மை 65% ஆகவும் பிரிவு (ii) இன் இலகுதன்மை 60% ஆகவும் பிரிவு (iii) இன் இலகுதன்மை 43% பிரிவு (iv) இன் இலகுதன்மை 27% ஆகவும் உள்ளன. முதலாம் நகரமயமாக்கல், இரண்டாம் நகரமயமாக்கல் பற்றிய ஒப்பீட்டு ரீதியான தகவல்களை அட்டவணைப்படுத்தல், வினாக்கொத்து தயாரித்தல் தேசப்படங்களில் உரிய இடங்களைக் குறித்துப் பெயரிடுதல் மூலம் கூடிய இலகுதன்மையை அடைய முடியும்.

பிரிவு (ii) இன் இலகுதன்மை 60% ஆகும். பாத்திரமேற்று நடித்தல், களப்பயணம் மூலம் தகவல்கள் சேகரித்தல் என்பவற்றால் கூடிய இலகுதன்மையை மேலும் அடைந்துகொள்ள முடியும்.

பிரிவு (iii) 43% இலகுதன்மையைப் பெற்றுள்ளதுடன் இதனை மேலும் அதிகரிப்பதற்கு உரிய காலம், தனிநபர்கள், நிகழ்வுகள், அரச நிர்வாகக் காலம் ஆகியவற்றை அட்டவணைப்படுத்துதல், இணைத்தல், தொடர்புபடுத்துதல் வகையான வினாக்களுக்கு விடை அளிக்கும் பயிற்சிகளில் ஈடுபடுத்துதல் என்பன மிகப் பொருத்தமானதாகும்.

பிரிவு (iv) 27% இலகுதன்மையைப் பெற்றுள்ளது. இலங்கையின் பொருளாதாரப் பாங்கின் மாற்றங்களை வெவ்வேறாக கிரகித்துக் கொள்ளாமை தொடர்பில் வரிப்படங்களின் துணையுடன் கலந்துரையாடல், உரிய மாற்றங்களை வெவ்வேறாக இனங்காண்பதற்கு இடமளிப்பதற்குத் தேவையான பயிற்சிகளைச் செய்வித்தல் என்பன மிகப் பொருத்தமானவையாகும்.

**வினா 6**

தேர்ச்சி : கண்டி இராச்சியத்தின் முக்கிய அரசியல், நிர்வாகம், சமூக அமைப்புப் பற்றி விளங்கிக் கூறுவர்.

**6.** (i) மலைநாட்டு இராசதானியின் தலைநகரமாக விளங்கிய கண்டியின் பாதுகாப்புடன் தொடர்புடைய முக்கியமான

(a) ஆறு

(b) கணவாய்கள் **இரண்டு**

என்பவற்றை ஒழுங்குமுறையில் எழுதுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் தகவல்களுடன் தொடர்புடைய நபர்கள் யாவர் என்பதை ஒழுங்குமுறைப்படி குறிப்பிடுக.

*A* - சீதாவாக்கை இராஜசிங்க மன்னன் கண்டி இராச்சியத்தை ஆக்கிரமித்த போது அங்கிருந்த ஆட்சியாளன்

*B* - புதிய அரச வம்சத்தை தொடங்கிய கண்டி இராச்சிய ஆட்சியாளன்

*C* - கி.பி.1602 இல் கண்டிக்கு வருகை தந்த ஒல்லாந்து தூதுக்குழுவின் தலைவர்

*D* - கி.பி.1766 இல் ஒல்லாந்தருடன் ஒப்பந்தமொன்றைச் செய்து கொண்ட கண்டி இராச்சிய ஆட்சியாளன்

(04 புள்ளிகள்)

(iii) கண்டி இராசதானியின் பிராந்திய நிருவாகம் ஒழுங்கமைந்திருந்த விதத்தை **இரண்டு** காரணிகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) கண்டி இராசதானியின் சமூக அமைப்பில் பிரதானமாகப் புலப்படும் பண்புகளை **மூன்று** உதாரணங்களைக் குறிப்பிட்டு விவரிக்குக. (06 புள்ளிகள்)

**6. (i) (a)** • மகாவலி கங்கை

**(b)** • பலனை

• உன்னஸ்கிரிய

• (கலகெதர, பலகடுவை, கினிகத்ஹேன) **(1 x 3 = 3** புள்ளிகள்**)**

**(ii)** *A* - கரலியத்தே பண்டாரன்

*B* - முதலாம் விமலதர்மசூரியன்

*C* - ஜோரிஸ் பன் ஸ்பில்பேர்ஜன் / ஸ்பில் பேர்ஜன்

*D* - கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் **(1 x 4 = 4** புள்ளிகள்**)**

**(iii)**

- பிரதேச பரிபாலனத்துக்கு பொறுப்பான துறை, ரடவசம் என அறிமுகமானமை.
- மலையக இராஜதானி - ரட்ட, திசாவை என இரண்டு துறைகளாக வகுக்கப்பட்டிருந்தமை.
- திசாவைகளும் பகுதிகளாக வகுக்கப்பட்டிருந்தமை.
- பரிபாலன துறைகளுக்கு பொறுப்பான அதிகாரிகளும் உதவி அதிகாரிகளும் காணப்பட்டமை.
- அவரவர் உத்தியோகத்துக்கு அமைவாக நீதி அதிகாரம் இருந்தது.

**(2 + 3 = 5** புள்ளிகள்**)**

**(iv)**

- சமூகம் குலத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது.
- மூன்று வகைத் திருமணங்கள் இடம் பெற்றன.
- கிராமங்கள் சுயதேவைப் பூர்த்தி அடைந்திருந்தன.
- நற்பண்புகளைக் கைக்கொள்ளல் சமூகத்தின் பிரதான இலட்சணமாயிருந்தது.
- உரிமையையும் அனுபவித்தலையும் அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வகைப்படுத்தப்பட்டிருந்தது.

**(3 + 3 = 6** புள்ளிகள்**)**

**6ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




வினா இலக்கம் 06 இனை 28% ஆனோர் தெரிவு செய்துள்ளனர். இவ்வினாவுக்குரிய புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 57%
05 - 09 ஆயிடையில் 20%
10 - 13 ஆயிடையில் 12%
14 - 18 ஆயிடையில் 11%

புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 அல்லது அதற்கு மேல் புள்ளிகளைப் பெற்றோர் 11% ஆகும். 57% ஆனோர் 04 அல்லது அதைவிட குறைந்த புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.




- இவ்வினாவுக்குரிய பிரிவுகள் உபபிரிவுகளில் கூடிய இலகுதன்மையை (i) *(a)* பெற்றுள்ளது. அது 85% ஆகும். குறைந்த இலகுதன்மையை (ii) *C* பெற்றுள்ளது. அது 21% ஆகும்.

கண்டி இராச்சியத்தின் புவியியல் அமைவிடம், முக்கிய அரசர்கள், பிரதேச நிர்வாக ஒழுங்கமைப்பு சமூக ஒழுங்கமைப்பின் முக்கிய பண்புகள் என்பவற்றை ஒப்பீட்டு ரீதியில் பரீட்சிப்பதற்காக இவ்வினா தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வினாவின் பிரிவு (i) a, b என்பவற்றின் இலகுதன்மை முறையே 85% உம் 32% உம் ஆகும். வினாவின் கூடிய இலகுதன்மை ஆற்றினை இனங்கண்டமை ஆகும். கணவாய்களை இனங்காண்பதை மேலும் விருத்திசெய்வதற்கு தேசப் படப்பயிற்சிகளைச் செய்வித்தல், புவியியல் பாடத்தின் மூலம் தகவல்களை பெறுதல் என்பவற்றால் கூடிய இலகுதன்மையை அடைய முடியும்.

இவ்வினாவின் பகுதி (ii) கண்டி இராச்சியத்தின் அரசர்கள் அவர்களுடன் ஒல்லாந்தர் கொண்டிருந்த தொடர்புகள் பற்றிய அறிவை பரிசீலனை செய்தலாகும். உபபிரிவுகளின் இலகுதன்மை முறையே A - 26%, B - 35%, C - 21%, D - 28% ஆகும். இலகுதன்மையை மேலும் அதிகரிப்பதற்கு இத்தகைய பாடப்பிரிவுகளின் தகவல்களை அச்சு ஊடகம், இலத்திரனியல் ஊடகங்கள், திரைப்படங்கள், தொலைக்காட்சி நாடகங்கள் என்பன மூலமும் அறிந்து கொள்வதற்கு இடமளிப்பதனை மேற்கொள்ள முடியும். அட்டவணைகள் மூலமும் தகவல்களைச் சேகரிப்பதனாலும் கூடிய இலகுதன்மையை அடையச்செய்ய முடியும்.

பிரிவு (iii) இன் இலகுதன்மை 22% ஆகும். இத்தகைய பாடப்பிரிவுகளின் அறிவை வளர்ப்பதற்கும் கூடிய இலகுதன்மையை அடைவதற்கும் தேசப்படங்கள் மூலம் இடங்கள், பிரதேசங்கள் பற்றிய பயிற்சிகளைச் செய்வித்தல் பாத்திரமேற்று நடித்தல் மூலம் பதவிகளை அறிமுகம் செய்தல், அதிகாரப் படிநிலை மூலம் பல்வகைமையை அறிமுகம் செய்தல் என்பவற்றை கற்றல் - கற்பித்தல் செயன்முறையில் பயன்படுத்த முடியும்.

பிரிவு (iv) இன் இலகுதன்மை 30% ஆகும். விடயங்களை விளக்கமாக முன்வைத்தல், உதாரணங்கள் காட்டுதல், பயிற்சிகள் செய்வித்தல், பேச்சுப் போட்டி, விவாதப் போட்டி, குழுச் செயற்பாடுகளில் ஈடுபடுத்தல், சுவர்ப்பத்திரிகை காட்சிப்படுத்தல், களப்புத்தகம் ஆக்குதல் என்பன கூடிய இலகுதன்மை பெற உதவுவன ஆகும்.

**வினா 7**

தேர்ச்சி : கோல்புறூக் அரசியலமைப்பு மறுசீரமைப்பு மூலம் மேற்கொள்ளப்பட்ட மாற்றங்களை அடிப்படையாகக் கொண்டு இலங்கையில் ஏற்பட்ட அரசியலமைப்பு மற்றும் பிரித்தானியர் காலத்தில் இலங்கையில் ஏற்பட்ட அரசியல் சமூக மாற்றங்களோடு சுதந்திரத்தின் பின் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சி தொடர்பாகவும் கருத்துக்களை முன்வைப்பர்.

**7.** (i) பின்வரும் அரசியல் மாற்றங்கள் ஒவ்வொன்றும் எந்த அரசியலமைப்புச் சீர்த்திருத்தங்களின் கீழ் இடம்பெற்றதென்பதை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிந்தெடுத்து *A*, *B* மற்றும் *C* ஒழுங்குமுறையில் குறிப்பிடுக.

*A* - சட்டத்துறைக்கு முதன்முதலில் வரையறுக்கப்பட்ட வாக்குரிமையடிப்படையில் பிரதிநிதிகளைத் தெரிவு செய்தல்

*B* - உறுப்பினர்கள் 61 பேரைக் கொண்ட அரசுக் கழகத்தை தாபித்தல்

*C* - உறுப்பினர்கள் 30 பேரடங்கிய செனட்சபை(மூதவை) தாபிக்கப்படல்

( கி.பி. 1833-கோல்புறூக், கி.பி. 1910-குறுமக்கலம், கி.பி. 1931-டொனமூர், கி.பி. 1947-சோல்பரி) (03 புள்ளிகள்)

(ii) 1833 கோல்புறூக் சீர்த்திருத்தங்களின் மூலம் ஏற்பட்ட நிருவாக மாற்றங்கள் **இரண்டையும்**,. பொருளாதார மாற்றங்கள் **இரண்டையும்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) பிரித்தானியராட்சியினால் இந்நாட்டிலேற்பட்ட சமூக மாற்றங்கள் **இரண்டைச்** சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) சுதந்திரத்தின் பின்னரான இலங்கையில் ஆரம்பிக்கப்பட்ட பல்நோக்கு அபிவிருத்தித் திட்டங்கள் **இரண்டைக்** குறிப்பிட்டு, அவை இந்நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்குப் பங்களிப்புச் செய்த விதத்தை **இரண்டு** காரணிகளை முன்வைத்து விளக்குக. (06 புள்ளிகள்)

**7. (i)** *A* - கி.பி 1910 குறு மக்கலம்

*B* - கி.பி 1931 டொனமூர்

*C* - கி.பி 1947 சோல்பரி

**(1 x 3 = 3** புள்ளிகள்)

**(ii)**
- நிர்வாக மாற்றங்கள்
  - சட்டவாக்க கழகம், சட்ட நிருவாகக் கழகங்கள் அமைக்கப்பட்டமை
  - மலைநாடும் கரையோரப் பிரதேசங்களும் ஒன்றிணைக்கப்பட்டமை
  - நாடு ஐந்து மாகாணங்களாக பிரிக்கப்பட்டமை
  - கிராம சபை முறை நீக்கப்பட்டமை
- பொருளாதார மாற்றங்கள்
  - கட்டாய அரசகரும முறை ஒழிக்கப்பட்டமை.
  - அரசின் வர்த்தக ஏகபோக முறை அகற்றப்பட்டமை.
  - பெருந்தோட்ட பயிர்செய்கை அறிமுகப்படுத்தப்பட்டமை.
  - நாட்டில் சேமிப்பு வங்கி முறை ஆரம்பிக்கப்பட்டமை. **(2 + 2 = 4** புள்ளிகள்)

**(iii)**
- ★ புதிய மத்திய தரவர்க்கத்தினர் தோற்றம் பெற்றமை.
- ★ தொழிலாளர் வகுப்பினர் தோற்றம் பெற்றமை.
  - தோட்டத் தொழிலாளர்
  - நகரத் தொழிலாளர்
- ★ மேலைத்தேய கலாசாரம் நாடு முழுவது.ம் பரவியமை.
- ★ ஆங்கில மொழியும் ஆங்கிலக் கல்வியும் கிடைக்கப் பெற்றமை. **(2 + 3 = 5** புள்ளிகள்)

**(iii)** - கல்லோயா

- மகாவலி

★ பொருளாதார அபிவிருத்திக்கு பங்காற்றிய விதம்

- விவசாயத்திற்கு பங்களிப்புச் செய்தல்.
- மின்னுற்பத்தியை மேற்கொள்ளல்.
- புதிய குடியேற்றத்திட்டங்களை உருவாக்குதல்.
- விவசாயப் பயிர்செய்கையை பரவலடையச் செய்தல்.
- வெள்ளப்பெருக்கை கட்டுப்படுத்தல்.
- நன்னீர் மீன் வளர்ப்பினை விருத்தியடையச் செய்தல்.
- புதிய தொழில் வாய்ப்புக்களை உருவாக்குதல்.
- கைத்தொழிலை விருத்தி செய்தல்.
- உட்கட்டமைப்பு வசதிகளை விருத்தி செய்தல். **(2 +2 + 2 = 6 புள்ளிகள்)**

**7ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




07 ஆம் வினாவைத் தெரிவுசெய்தோர் 50.64% ஆவர். இந்த வினாவுக்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 48%
05 - 09 ஆயிடையில் 25%
10 - 13 ஆயிடையில் 14%
14 - 18 ஆயிடையில் 13%

புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இவ்வினாவுக்கு 14 அல்லது அதை விட அதிகமான புள்ளிகளைப் பெற்றவர்கள் 13% ஆகும். 48% ஆனோர் 04 அல்லது அதற்குக் குறைந்த புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.




★ இவ்வினாவுக்குரிய பிரிவுகள், உபபிரிவுகளில் கூடிய இலகுதன்மையை (i) B உம் C உம் ஆகும். அதன் இலகுதன்மை 57% ஆகும். குறைந்த இலகுதன்மை கொண்ட பிரிவு (iv) ஆவதோடு அதன் இலகுதன்மை 31% ஆகும்.

கோல்புறூக் அரசியலமைப்புச் சீர்திருத்தத்தினால் ஏற்படுத்தப்பட்ட மாற்றங்களை முக்கியமாகக் கொண்டு இலங்கையில் ஏற்பட்ட அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் பற்றிய அறிவு பிரித்தானியர் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட சமூக மாற்றங்கள், சுதந்திரத்தின் பின்னர் ஏற்படுத்தப்பட்ட பல்நோக்கு அபிவிருத்தித் திட்டங்கள் பொருளாதார அபிவிருத்திக்குப் பங்களிப்புச் செய்த விதம் என்பவற்றை விமர்சன ரீதியாகப் பகுப்பாய்வு செய்தலை பரீட்சிப்பதற்காக இந்த வினா தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வினாவினை தெரிவுசெய்த பரீட்சார்த்திகள் சதவீதம் 50.64% ஆகும்.

பிரிவு (i) இற்கு உரிய மொத்த இலகுதன்மை 55.3% ஆகும். பிரித்தானியர் ஆட்சிக்காலத்தில் அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்த அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் பற்றி வெவ்வேறாக இனங்காணப்பட வேண்டும். அட்டவணைகளைப் பயன்படுத்தி அந்த அறிவை விருத்தி செய்ய முடியும். குறு வினாக்களுக்கு விடை எழுதுதலின் மூலமும் அறிவை மேலும் விருத்தி செய்ய முடியும்.

பிரிவு (ii) இன் இலகுதன்மை 39% ஆகும். பிரித்தானியர் ஆட்சிக்காலத்தில் கோல்புறூக் சீர்திருத்த ஆலோசனைகள் பலவற்றால் ஏற்பட்ட நிர்வாக மாற்றங்கள் பொருளாதார மாற்றங்கள் பற்றி வெவ்வேறாக இனம்காண முடியவில்லை. குழுச் செயற்பாடுகள் மூலம் அறிவினை மேலும் விருத்தி செய்துகொள்ள முடியும். நிர்வாகம் மற்றும் பொருளாதார மாற்றங்களை வெவ்வேறாகக் காட்டும் சுவர்ப்பத்திரிகளைக் காட்சிப்படுத்தல் மூலமும் இலகுதன்மையை அதிகரிக்கச் செய்யலாம்.

பிரிவு (iii) இன் இலகுதன்மை 38% ஆகும். பிரித்தானியர் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த சமூக மாற்றங்கள் பற்றி இனங்காணப்பட வேண்டும். இதற்கு அட்டவணைப்படுத்தல் முறையைப் பயன்படுத்தலாம். பிரித்தானியர் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட சமூக மாற்றங்கள் பற்றிய நாடகங்களை முன்வைப்பதனூடாக மாணவர்களிடம் இரசனையுடனான அறிவை விருத்தி செய்ய முடியும்.

பிரிவு (iv) இன் இலகுதன்மை 31% ஆகும். சுதந்திரத்தின் பின்னர் இலங்கையில் ஆரம்பிக்கப்பட்ட பல்நோக்கு அபிவிருத்தித் திட்டங்கள் இந்நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்கு பங்களிப்புச் செய்த விதம் பற்றிய சரியான அறிவை வழங்குதல் மூலம் இலகுதன்மையை விருத்தி செய்ய முடியும். மாணவர்களைக் கல்விச் சுற்றுலாவில் பங்கேற்கச் செய்து மகாவலி நீர்த்தேக்கங்களைப் பார்வையிடச் செய்வதன் மூலம் அறிவை விருத்தி செய்துகொள்ள முடியும். பிரதமமந்திரி டி.எஸ். சேனாநாயக்கா பற்றி மாணவர்கள் விளங்கிக் கொள்வதனூடாக கல்லோயா அபிவிருத்தித் திட்டம் பற்றி அறிந்து கொள்வதற்குச் சந்தர்ப்பம் கிட்டும். இவற்றினூடாக இவ்வினாவுக்கான இலகுதன்மையை மேலும் அதிகரிக்க முடியும்.

## பகுதி III

**வினா 8**

தேர்ச்சி : கைத்தொழில் புரட்சி ஏற்பட்ட முக்கிய துறைகளையும் போக்குவரத்து தொடர்பாடல் போன்ற துறைகளில் ஏற்பட்ட மாற்றங்களையும் உலகத்தில் ஏற்பட்ட சமூக மாற்றங்களையும் இலங்கையில் செல்வாக்கு செலுத்திய விதத்தையும் எடுத்துரைப்பர்.

**8.** (i) பிரித்தானியாவில் கைத்தொழிற்புரட்சியானது மூன்று பிரதான கைத்தொழில்களை அடிப்படையாகக் கொண்டு ஆரம்பித்தது. அக் கைத்தொழில்களைப் பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) கைத்தொழிற் புரட்சியின் போது (*A*) தொடர்பாடல் மற்றும் (*B*) போக்குவரத்து துறைகளிலேற்பட்ட புதிய உற்பத்திகள் **இரண்டு** வீதம் ஒழுங்குமுறைப்படி குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) கைத்தொழிற் புரட்சியின் விளைவாக உலக சமூகத்திலேற்பட்ட மாற்றங்கள் **இரண்டை** விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கைத்தொழிற் புரட்சி இலங்கை மீது செல்வாக்குச் செலுத்திய விதத்தை **மூன்று** உதாரணங்களைக் குறிப்பிட்டு விளக்குக. (06 புள்ளிகள்)

**8. (i)**
- நெசவு (புடைவை)
- நிலக்கரி
- இரும்புருக்கு

**(1 x 3 = 3** புள்ளிகள்)

**(ii)** **A - தொடர்பாடல்**
- தந்திமுறை
- தொலைபேசி
- வானொலி
- தொலைக்காட்சி

**B - போக்குவரத்து**
- மெக்கடம் முறை
- புகையிரத என்ஜின்
- புகைப்படகு
- புகைக்கப்பல்
- மோட்டார் வண்டி
- ஆகாய விமானம்.

**(2 + 2 = 4** புள்ளிகள்)

**(iii)**
- நகரங்கள் உருவாகியமை.
- புதிய வேலைவாய்ப்புக்கான சந்தர்ப்பங்கள் உருவானமை.
- தொழிலாளர் வர்க்கம் உருவானமை.
- கைத்தொழில் நகரங்கள் உருவானதுடன் சேரிப்புறம் உருவானமை.
- உழைப்பு சுரண்டப்பட்டமை
- பெண்கள், சிறுவர்கள் வேலைக்கமர்த்தப்பட்டமை.
- சூழல் மாசடைதல்.
- சமூக அடிப்படை சுகாதார நலன்புரி நடவடிக்கைகளில் அரசாங்கம் கவனம் செலுத்தியமை.

**(2 + 3 = 5** புள்ளிகள்)

**(iv)**
- பாரிய நிலப்பரப்பில் பெருந்தோட்ட பயிர்செய்கை மேற்கொள்ளப்பட்டமை.
- வர்த்தக பயிர்செய்கை மேற்கொள்ளப்பட்ட இடங்களுக்கு அண்மையில் கைத்தொழில்சாலைகளை உருவாக்கியமை.
- இயந்திர சாதனங்கள் பயன்படுத்தப்பட்டமை (தொழிற்சாலைகளில்)
- பெருந்தெருக்கள் அமைத்தல். (மக்கடம் முறை)
- உட்கட்டமைப்பு வசதிகள் விரிவாக்கப்பட்டமை. (பெருந்தெருக்கள், புகையிரதம், தொடர்பாடல், துறைமுகம்)
- மரபுரீதியான பொருளாதார முறை மாற்றம் பெற்று முதலாளித்துவ பொருளாதாரம் உருவானமை.

**(3 + 3 = 6** புள்ளிகள்)

**8ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




08 ஆம் வினாவை 71.49% ஆனோர் தெரிவுசெய்துள்ளனர். இந்த வினாவுக்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 18%
05 - 09 ஆயிடையில் 32%
10 - 13 ஆயிடையில் 25%
14 - 18 ஆயிடையில் 25%
புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 அல்லது அதற்கு மேற்பட்ட புள்ளிகளைப் பெற்றோர் 25% ஆவர். 18% ஆனோர் 04 புள்ளிகளை அல்லது அதற்குக் குறைந்த புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.




★ இவ்வினாவுக்குரிய 4 பிரிவுகளில் கூடிய இலகுதன்மையை பிரிவு (i) பெற்றுள்ளது. அது 89% ஆகும். குறைந்த இலகுதன்மையை பிரிவு (iv) பெற்றுள்ளது. அது 41% ஆகும்.

கைத்தொழில் புரட்சி நிகழ்ந்த துறைகள், புதிய உற்பத்திகள் சமூகத்துறையில் ஏற்பட்ட தாக்கம் பற்றிய அறிவு விளக்கம் கைத்தொழில் புரட்சியின் செல்வாக்கு இலங்கையில் தாக்கம் ஏற்படுத்திய விதம் என்பவற்றை ஒப்பீட்டு ரீதியில் பரீட்சிப்பதே இவ்வினா தயாரிக்கப்பட்டதன் நோக்கமாகும். இவ்வினாவைத் தெரிவுசெய்தோர் எண்ணிக்கை 71% ஆகும்.

வினாவின் பிரிவு (i) பிரித்தானியாவில் கைத்தொழில் புரட்சி பரவிய முக்கிய மூன்று கைத்தொழில் துறைகளை இனங்காண்பதே எதிர்பார்க்கப்பட்டது. இவ்விடயம் பற்றிய அறிவு உயர் மட்டத்தில் காணப்பட்டதால் இலகுதன்மை 89% இனைப் பெற்றுக் கொண்டது.

பிரிவு (ii) கைத்தொழில் புரட்சியினால் தொடர்பாடல், போக்குவரத்து ஆகிய துறைகளில் ஏற்பட்ட புதிய உற்பத்திகளை இரண்டு வீதம் குறிப்பிடுதல் எதிர்பார்க்கப்பட்டது. இதன் இலகுதன்மை 78% ஆகும். கைத்தொழில் புரட்சிக் காலத்தின் புதிய உற்பத்திகளை இனங்காணுதல் பற்றிய அறிவு உயர் அடைவு மட்டத்தில் காணப்படுகின்றது. இலகுதன்மையை மேலும் அதிகரிப்பதற்கு புதிய உற்பத்திகளுடன், அவற்றை உற்பத்தி செய்த நபர்கள் பற்றிய ஒளிப்படங்கள் சேகரித்து கோவைப்படுத்தல், காட்சிப்படுத்தல், வினா விடைப் போட்டி நடாத்துதல் போன்ற செயற்பாடுகளில் ஈடுபடுத்துதல் பொருத்தமானதாகும்.

வினாவின் பிரிவு (iii) கைத்தொழில் புரட்சியின் காரணமாக உலகின் சமூகத்துறையில் ஏற்பட்ட மாற்றங்கள் இரண்டைக் குறிப்பிட்டு விவரித்தல் எதிர்பார்க்கப்பட்டது. இதன் இலகுதன்மை 44% ஆகும். இதற்கான காரணம் விடையளிக்கும்போது சமூகத்துறை போலவே பொருளாதார அரசியல் துறைகளில் ஏற்பட்ட மாற்றங்களையும் கவனத்தில் கொண்டிருந்தமையாகும். இவ்விடயங்களைத் தெளிவாக உறுதிப்படுத்துவதற்கு வெவ்வேறாக அட்டவணைப்படுத்தல், ஒப்பீடு செய்தல், காட்சிப்படுத்தல், தெரிவு செய்தல் போன்ற பல்வேறு செயற்பாடுகளை பயன்படுத்தல் பொருத்தமானதாகும்.

வினாவின் பிரிவு (iv) கைத்தொழில் புரட்சி இலங்கையில் தாக்கம் செலுத்திய விதத்தை மூன்று உதாரணங்கள் குறிப்பிட்டு விளக்குதலே எதிர்பார்க்கப்பட்டது. முழு வினாவினதும் மிகக் குறைந்த இலகுதன்மை இப்பகுதிக்கு உரியதாகும். இது 41% ஆகும். பிரித்தானியர் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த பெருந்தோட்டக் கைத்தொழிலின் ஆரம்பம், கைத்தொழிற்சாலைகளில் இயந்திர உபகரணங்களைப் பயன்படுத்துதல் மக்கடம் முறை இலங்கைக்கு அறிமுகப்படுத்தப்பட்டமை போன்ற விடயங்களைக் கைத்தொழில் புரட்சியுடன் இணைப்பதற்கு இயலாதிருந்தமையே இலகுதன்மை குறைவடையக் காரணமாகியது. இவ்விடயங்களை அடைவதற்குக் கைத்தொழில் புரட்சியின் விளைவுகளாக பிரித்தானியர் ஆட்சிக் காலத்தில் இலங்கையில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றிக் கற்பதன் மூலம் இலகுதன்மையை அதிகரிக்க முடியும்.

**வினா 9**

தேர்ச்சி : முதலாம் இரண்டாம் உலக மகா யுத்தங்களில் ஈடுபட்ட நாடுகளையும் காரணங்களையும் பேரழிவுகளையும் எடுத்துக் கூறுவர்.

**9.** (i) முதலாம் உலக மகா யுத்தத்தின் போது காணப்பட்ட நேச(நட்பு) அணிக்குரிய நாடுகள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் தகவல்களுக்குரிய விடைகளை ஒழுங்குமுறைப்படி தருக.

*A* - முதலாம் உலக மகா யுத்தத்தின் போது அமெரிக்காவிலிருந்த ஜனாதிபதி

*B* - இரண்டாம் உலக மகா யுத்தத்தின் போது யப்பானிய தாக்குதலுக்குட்பட்ட அமெரிக்கத் துறைமுகம்

*C* - இரண்டாம் உலக மகா யுத்தத்தின் போது ஜேர்மன் வதை முகாம்களில் கொல்லப்பட்ட இனம்

*D* - அடோல்ப் ஹிட்லரின் இரகசிய பொலிஸாரைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்ட பெயர் (04 புள்ளிகள்)

(iii) இரண்டாம் உலக மகா யுத்தத்திற்கு ஏதுவாயமைந்த காரணிகள் **இரண்டைச்** சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) இரண்டாம் உலக மகா யுத்தத்தினால் பேரழிவுகள் ஏற்பட்டமையை **மூன்று** காரணிகளைக் குறிப்பிட்டு விளக்குக. (06 புள்ளிகள்)

**9. (i)**
- பிரான்ஸ்
- ஐக்கிய அமெரிக்கா
- பிரித்தானியா
- ரஸ்யா

**(1 x 3 = 3** புள்ளிகள்)

**(ii)**
*A* - வூட்றோ வில்சன்
*B* - பேர்ள்
*C* - யூதர்கள்
*D* - கெஸ்டபோ

**(1 x 4 = 4** புள்ளிகள்)

**(iii)**
- ஜெர்மனியில் ஹிட்லரின் எழுச்சியும் அவரின் நடவடிக்கையும்
- இத்தாலியில் முசோலினியின் செயற்பாடுகள்
- யப்பானின் நடவடிக்கைகள் (ஆக்கிரமிப்பு)
- சர்வதேச சங்கத்தின் பலவீனம்.

**(2 + 3 = 5 புள்ளிகள்)**

**(iv)**
- அதிக உயிர்சேதங்கள் ஏற்பட்டமை.
- பாரியளவில் சொத்துக்கள், செல்வங்கள் அழிவடைந்தமை.
- அங்கவீனர்கள், அநாதைகள், அகதிகள் உருவானமை.
- சூழல் மாசடைதல் (நீண்டகால)
- யுத்தம் ஏற்பட்ட நாடுகளில் பொருளாதார வீழ்ச்சி அடைந்தமை.

**(3 + 3 = 6 புள்ளிகள்)**

**9ஆம் வினாவுக்கு விடையளிக்கப்பட்ட விதம் பற்றிய அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




09 ஆம் வினாவை 24.87% த்தினர் தெரிவு செய்துள்ளனர். இந்த வினாவுக்கான புள்ளிகள் 18 ஆகும்.

00 - 04 ஆயிடையில் 22%
05 - 09 ஆயிடையில் 23%
10 - 13 ஆயிடையில் 23%
14 - 18 ஆயிடையில் 32%
புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இந்த வினாவுக்கு 14 அல்லது அதற்குக் கூடிய புள்ளிகளைப் பெற்றோர் 32% ஆகும். 22% ஆனோர் 04 அல்லது அதற்கும் குறைந்த புள்ளிகளைப்




★ இவ்வினாவுக்குரிய 7 உபபிரிவுகளில் கூடிய இலகுதன்மை பெற்ற உபபிரிவு (ii) *B* ஆகும். அது 68% குறைந்த இலகுதன்மை பெற்ற பிரிவு (ii) *D* ஆகும். அது 36% ஆகும்.

உலக மகாயுத்தத்தில் பங்குபற்றிய நாடுகள் அங்கு முக்கியத்துவம் பெற்ற நபர்கள், யுத்தம் ஏற்படுவதற்கான காரணங்கள் அவற்றின் விளைவுகளான பேரழிவுகள் தொடர்பான விமர்சித்தல் திறனை பரீட்சிப்பதற்கே இவ்வினா தயாரிக்கப்பட்டுள்ளது.

இவ்வினாவின் பிரிவு (i) முதலாம் உலகமகா யுத்தத்தில் நேச அணிக்குரிய நாடுகள் மூன்றின் பெயர் குறிப்பிடுதலே எதிர்பார்க்கப்பட்டது. இதன் இலகுதன்மை 65% ஆகும்.

பிரிவு (ii) இன் உபபிரிவுகளின் இலகுதன்மை முறையே A - 52%, B - 68%, C - 56%, D - 36% ஆகும். கூடிய இலகுதன்மையும் குறைந்த இலகுதன்மையும் கொண்டவையாக B - 68% உம் D - 36% உம் காணப்படுகின்றன. பிரிவு D இன் இலகுதன்மையை அதிகரிக்க பாடப்பகுதியைச் சிறு சிறு பகுதிகளாக்கி அவற்றில் கவனம் செலுத்துவது முக்கியமானதாகும்.

பிரிவு (iii) இன் இலகுதன்மை 57% ஆகும். இங்கு இரண்டாம் உலக மகா யுத்தத்திற்கான காரணிகளை விவரித்தல் எதிர்பார்க்கப்பட்டது. இதன் இலகுதன்மையை மேலும் அதிகரிப்பதற்கு உலக மகாயுத்தங்களுடன் தொடர்புடைய விடயங்களை ஒப்பீட்டு ரீதியில் இணைத்தல், விடயங்களை ஒழுங்குமுறையில் வரிசைப்படுத்தல், காரணங்கள் பற்றி அறிஞர் குழு கலந்துரையாடல் நிகழ்த்துதல் போன்ற உத்திகளைப் பயன்படுத்த முடியும்.

பிரிவு (iv) இன் இலகுதன்மை 54% ஆகும். இதில் இரண்டாவது உலக மகாயுத்தத்தின் விளைவுகளான பேரழிவுகள் பற்றிய விடயங்களை விளக்குவதே கேட்கப்பட்டுள்ளது. இதன் இலகுதன்மையை அதிகரிப்பதற்கு உலக மகாயுத்தங்களின் விளைவுகள் பற்றி மேலதிக வாசிப்பில் ஈடுபடுத்தல், உரிய காட்சிகள், ஒளிப்படங்கள் பார்வையிட ஒழுங்கு செய்தல், மாணவர்களிடையே விவாதங்கள், கலந்துரையாடல்கள் ஒழுங்கமைத்தல் போன்ற செயற்பாடுகளை ஏற்படுத்த முடியும்.

2.2.3 II ஆம் வினாத்தாளிற்கு அளிக்கப்பட்ட விடைகள் தொடர்பான முழுமையான அவதானிப்புகளும், முடிவுகளும், ஆலோசனைகளும் :




## பகுதி I

முதலாவது பிரிவில் முதலாம் வினா மட்டுமே உள்ளது என்பதுடன் அது கட்டாய வினாவுமாகும். இவ்வினா (அ) (i), (ii) (ஆ) (i), (ii), (iii) எனும் உபபிரிவுகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வினாவுக்கு உரிய புள்ளிகள் 30 ஆகும். இலங்கை வரலாற்றுக்கு உரியவை (அ) (i), (ஆ) (i) B, C, (ii) எனும் உபபிரிவுகள் மட்டுமே ஆகும். உலக வரலாற்றுக்கு உரிய தகவல்களை (ஆ), (அ) (ii), (ஆ) (i) A, D, (ஆ) (iii) ஆகிய உபபிரிவுகளைக் கொண்டுள்ளன. முதலாம் வினாவின் இலகுதன்மை இலங்கை வரலாற்றுக்கு 42% உம் உலக வரலாற்றுக்கு 44% உம் ஆகும்.

இலங்கை வரலாறு தொடர்பான வினாக்களில் கூடிய இலகுதன்மையை பகுதி (அ) (i) C உபபிரிவு கொண்டுள்ளது. அது 74% ஆகும். இதில் கல்பொத்த கல்வெட்டைச் செதுக்குவித்த பொலன்னறுவை மன்னன் பற்றியே கேட்கப்பட்டுள்ளது. இந்த உரு பற்றி மாணவர் தரம் 6 இலிருந்து தெரிந்து கொண்டிருப்பதால் இவ்வினா கூடிய இலகுதன்மை பெறுவதற்குக் காரணமானது.

உலக வரலாற்றுப் பிரிவில் கூடிய இலகுதன்மையை (ஆ) (iii) 4 உப பிரிவு பெற்றுள்ளது. அது 59% ஆகும். இதில் பிரான்சுப் புரட்சியுடன் தொடர்புடைய பஸ்ரீல் சிறைச்சாலை பற்றிக் கேட்கப்பட்டுள்ளது. சாதாரண அறிவு மூலமும் குடியியல் கல்வி பாடம் மூலமும் பெற்ற அறிவினால் கூடிய இலகுதன்மை பெறக் காரணமாகியது எனலாம்.

இலங்கை வரலாற்றுப் பிரிவில் குறைந்த இலகுதன்மையை (ஆ) (i) A பிரிவு பெற்றுள்ளது. இது 27% ஆகும். பாடநூலில் தகவல்கள் போதுமான அளவு இல்லாமையே இதற்குக் காரணம் எனலாம்.

உலக வரலாற்றுப் பிரிவில் குறைந்த இலகுதன்மையை (ஆ) (iii) 2 உபபிரிவு பெற்றுள்ளது. அது 17% ஆகும்.

இதில் பஸ்ரீல் அமைந்துள்ள நகரம் பற்றிக் கேட்கப்பட்டுள்ளது. எனினும் அதிகமானோர் நாட்டின் பெயரையே (பிரான்ஸ்) விடையாக எழுதியிருந்தனர். இதற்குக் காரணம் தேசப்படம் பற்றிய விளக்கமின்மை நாடு நகரம் என்பன பற்றி வெவ்வேறாக இனங்காணாமை என்பன ஆகும்.

தேசப்படத்தில் குறித்துப் பெயரிடுதல் தொடர்பான இலங்கை, உலகம் இரண்டு பிரிவினதும் இலகுதன்மை 86% ஆகும். தேசப்படங்களில் குறித்துப் பெயரிடும்போது தேசப்படக் கலை பற்றிய அடிப்படைக் கோட்பாடுகள் பற்றிய அறிவு, சரியான விளக்கம், இடங்களை உரிய முறையில் குறித்துப் பெயரிடும் பயிற்சிகளில் ஈடுபடுத்தல் இத்தகைய கூடிய இலகுதன்மை பெறுவதற்கான காரணம் எனலாம். கற்றல் - கற்பித்தல் செயன்முறையின்போது பாடப் பிரவேசமாக தேசப்படப் பயிற்சிகளில் ஈடுபடுத்தல் போன்ற விசேட கற்றலில் ஈடுபடச் செய்தல் கூடிய இலகுதன்மையை அடைவதற்குக் காரணமாகும்.

## பகுதி II

இலங்கை வரலாற்றுக்கு உரிய இப்பிரிவின் இலகுதன்மை 45% ஆகும். இப்பிரிவில் 06 வினாக்கள் உள்ளன. இவற்றில் 4 வினாக்களுக்கு விடை எழுதுதல் வேண்டும். வினாக்களைத் தெரிவு செய்தமை முறையே (2) - 92%, (3) - 90%, (4) - 91%, (5) - 43%, (6) - 28%, (7) - 51% ஆகும். வினாக்களைத் தெரிவு செய்யும்போது 2, 3, 4 ஆகிய வினாக்கள் 90% மட்ட இலகுதன்மையைக் காட்டியுள்ளன. 2 ஆம் வினாவின் இலகுதன்மை 92% ஆகும். இவற்றில் இலங்கையின் குடியேற்றங்கள் அனுராதபுரக் கால நீர்ப்பாசனம், மையப்படுத்தப்பட்ட நிர்வாகம் ஆகியவை தொடர்பாகக் கேட்கப்பட்டுள்ளன. 2 ஆம் வினாவின் பிரிவு (iii) A, B உபபிரிவுகள் பற்றி விளக்கமான விடை தேவையற்றிருந்தமை இவ்வினா கூடிய இலகுதன்மை பெறக் காரணமாகியது.

இவ்வினாத்தாளில் சகல வினாக்களில் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ள விடைகளிலிருந்து சரியான விடையைத் தெரிவு செய்வதற்காகவுள்ள வினாக்களின் உபபிரிவுகளுக்கு கூடிய இலகுதன்மையைக் கொண்டிருந்தன. தரப்பட்டுள்ள விடைகளிலிருந்து வினாக்களில் தெரிவுசெய்வது இலகுவானதாகையால் தெளிவாக விடை எழுதுவதற்கான அந்த ஆற்றல் காரணமாக அமைந்துள்ளது.

இப்பிரிவில் குறைந்த இலகுதன்மையை 6 ஆம் வினா பெற்றுள்ளது. அது 28% ஆகும். கண்டி இராச்சியத்தின் புவியியல் அமைவிடம், முக்கிய அரசர்கள், பிரதேச நிர்வாகமும் ஒழுங்கமைப்பின் பிரதான பண்புகளும் இதில் பரீட்சிக்கப்பட்டன. இவ்வினாவில் பரீட்சார்த்திகளுக்கு விடை எழுதுவதற்கான உதவிக் குறிப்புகள் இல்லாமை விருப்புத் தெரிவு குறைவடையக் காரணமாகியது எனலாம்.

கண்டி இராச்சியம் தொடர்பான பாட விடயங்கள் சிக்கலானவை. ஆதலினால் குறைந்த கவனம் செலுத்தப்படுவதற்குக் காரணமானதால் தெரிவுசெய்தோர் தொகை மட்டுப்படுத்தப்பட்டிருந்தது.

எண்ணக்கருப்படம், அட்டவணைப்படுத்தல் பொருத்தமான அட்டைகளைத் தெரிவுசெய்தல், அறிவாளர் குழு கலந்துரையாடல், கட்புல செவிப்புல சாதனங்கள் என்பவற்றைப் பயன்படுத்துதல், மேலதிகக் கற்றல் என்பனவற்றால் கூடிய இலகுதன்மையை அடைய முடியும்.

## பகுதி III

உலக வரலாற்றுப் பிரிவின் இலகுதன்மை 57% ஆகும். இதில் இரண்டு வினாக்கள் உள்ளதுடன் இவை இரண்டினுள் கூடிய தெரிவை 8 ஆம் வினா பெற்றிருந்தது. அது 71.49% ஆகும். 9 ஆம் வினாவுக்கான தெரிவு 24.87% ஆகும்.

8 ஆம் வினாவின் மூலம் கைத்தொழில் புரட்சி இடம்பெற்ற துறைகள், புதிய உற்பத்திகள், சமூகத்துறையில் நிகழ்ந்த தாக்கங்கள் பற்றிய அறிவு விளக்கம், கைத்தொழில் புரட்சியின் செல்வாக்கு இலங்கையில் தாக்கம் செலுத்தியவிதம் என்பதை ஒப்பிட்டு பரீட்சித்தலே எதிர்பார்க்கப்பட்டதாகும்.

இவ்வினாவை பெரும்பாலானோர் தெரிவு செய்தமைக்கு வரையறைக்குட்பட்ட விடயங்கள் உள்ளடங்கியிருந்தமையும், முன்வைப்பதற்கு எளிதாக இருந்தமையுமே காரணங்கள் எனலாம். இது பற்றி பாடத்திட்டத்தில் அதிக கவனம் செலுத்தியமையும் பாட விடயங்களை இலகுவில் கற்க முடியுமாக இருந்தமையும் கைத்தொழில் புரட்சியின் தாக்கங்களை இலங்கையில் காணக்கூடியதாயிருந்தமையும் இத்தெரிவுக்குக் காரணமானது எனலாம்.

9 ஆம் வினா உலக மகாயுத்தங்களில் பங்குபற்றிய தரப்பினரான நாடுகள், முக்கிய நபர்கள், ஏற்படுவதற்கான காரணங்கள், பேரழிவான விளைவுகள் பற்றி விமர்சிக்கும் திறனை பரீட்சிக்கவே கேட்கப்பட்டதாகும்.

முழுமையான வினாத்தாளிலே குறைந்த விருப்புத் தெரிவை இவ்வினா கொண்டுள்ளது. இதன் இலகுதன்மை 24.87% ஆகும். இவ்வினாவுக்குரிய பாட விடயங்கள் தரம் 11 பாடநூலில் இறுதிப்பாடத்தில் காணப்படுவதால் அதிக கவனம் செலுத்தப்படாமை விருப்புத் தெரிவு குறைவடைந்தமைக்குக் காரணமாக இருக்கலாம். சரியான பதிலை வழங்குவது குறைவடைந்தமைக்கு பாடவிடயங்களைச் சரியாக விளங்கிக் கொள்ளாதிருந்தமையும் செல்வாக்குச் செலுத்தியுள்ளது. இலகுதன்மையை அதிகரிப்பதற்கு இவ்விடயத்தலைப்புப் பற்றி அதிக கவனம் செலுத்தி கற்பித்தலின்போது ஒளிப்படங்கள் காணொளிக்காட்சிகள் காட்சிப்படுத்தல்கள் வினாவிடைப் போட்டி போன்ற ஆக்கத்திறனுள்ள கற்றல் - கற்பித்தல் முறைகளில் கவனம் செலுத்துதல் வேண்டும்.

## பகுதி III

**3 விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்களும் ஆலோசனைகளும் :**

**3.1 விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்கள் :**

**பொது அறிவுறுத்தல்கள் :**

- ⋆ வினாத்தாளிலுள்ள அடிப்படை அறிவுறுத்தல்களை வாசித்து விளங்கிக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு பகுதியிலும் விடையளிக்கப்பட வேண்டிய வினாக்களின் எண்ணிக்கை, கட்டாய வினாக்கள் யாவை, எவ்வளவு கால அவகாசம் வழங்கப்பட்டுள்ளது, புள்ளி ஒதுக்கீடு எவ்வளவு என்பவை பற்றிய விடயங்களைக் கவனத்திற் கொள்வதுடன் வினாக்களை நன்கு வாசித்துத் தெளிவான விளக்கம் பெற்ற பின்னர் விடையளிக்க வேண்டிய வினாக்களைத் தெரிவு செய்து விடையளித்தல் வேண்டும்.
- ⋆ முதலாம் வினாத்தாளிற்கு விடையளிக்கும்போது மிகச் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்தல் வேண்டும். பின்னர் தெளிவாக ஒரு புள்ளடி அடையாளத்தை இடுதல் வேண்டும்.
- ⋆ இரண்டாம் வினாத்தாளிற்கு விடையளிக்கும்போது ஒவ்வொரு வினாவையும் விடைத்தாளின் புதிய பக்கத்தில் ஆரம்பித்தல் நன்று.
- ⋆ திருத்தமான தெளிவான கையெழுத்தில் எழுத வேண்டும்.
- ⋆ சுட்டெண்களைத் தெளிவாக ஒவ்வொரு பக்கத்திலும் உரிய இடங்களில் எழுதுதல் வேண்டும்.
- ⋆ வினா இலக்கத்தையும் பகுதி வினாக்களின் இலக்கங்களையும் உபபகுதி வினாக்களின் இலக்கங்களையும் தெளிவாக திருத்தமாக எழுதுதல் வேண்டும்.
- ⋆ சுருக்கமாக விடை எழுத வேண்டியவைக்கு நீண்ட விடைகளையும், விளக்கமாக விடை எழுத வேண்டியவைக்கு சுருக்கமான விடைகளையும் எழுதுவதைத் தவிர்த்தல் வேண்டும்.
- ⋆ வினாக்கள் கேட்கப்படும் விதத்துக்கேற்றவாறு தர்க்க ரீதியாகவும் பகுப்பாய்வு ரீதியாகவும் விடயங்களை முன்வைத்தல் வேண்டும்.
- ⋆ இரண்டாம் வினாத்தாளில் பிரிவுகளுக்கு விடை எழுதும்போது குறிப்பிட்ட வினா எண்ணிக்கைகளுக்கு மட்டும் உரிய நேரத்தில் விடை எழுதுவதுடன் மேலதிக விடைகளை எழுதுவதற்கு நேரத்தை ஒதுக்கக் கூடாது.

**விசேட அறிவுறுத்தல்கள் :**

- ⋆ தேசப்படங்களில் குறித்துப் பெயரிடும்போது கவனத்தில் கொள்ள வேண்டியவை :
  - நகரங்களைக் குறிக்கும்போது மிகச் சரியான இடத்தில் புள்ளியிட்டுப் பெயரிடுதல்.
  - இராச்சியங்கள், குளங்கள் என்பவற்றைக் குறிப்பிட உரிய பிரசேதத்தை நிழற்றிக் காட்டுதல்.
  - ஆறுகள் மலைகள் என்பவற்றைக் குறிக்கும்போது அவற்றை இனங்காணும் விதத்தில் பெயரிடுதல்.
- ⋆ கேட்கப்படும் வினாக்களுக்குப் பொருத்தமானவாறு விடைகளைத் தொகுத்து முன்வைத்தல்.
- ⋆ விடயங்களைக் குறிப்பிடுதல் அவற்றை விளக்குதல், விவரித்தல், சான்றாதாரம் காட்டுதல் என்பவற்றுக்கேற்பவே வினாக்களுக்குரிய புள்ளிகள் வழங்கப்படுகின்றன என்பதை விளங்கிக் கொள்ளுதல்.
- ⋆ கட்டமைப்பு வகை வினாக்களில் உதாரணங்கள், விடயங்கள் என்பவற்றை முன்வைத்தல் வேண்டும்.
- ⋆ விடைகளை எழுதும்போது புள்ளியிடுவதற்கு இலகுவாக விடைகளைப் பந்தி பந்தியாக வேறுபடுத்தி எழுதுதல் வேண்டும்.
- ⋆ ஒழுங்குமுறையில் விடைகளை எழுதும்போது வினாக்களின் ஒழுங்கினைக் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும்.

**அதிபர்களுக்கான ஆலோசனைகள் :**

★ பாட விருத்தியின் பொருட்டு வருடாந்த செயற் திட்டத்தினை தயாரித்து அவற்றைச் செயற்படுத்துவதற்கும் வழிகாட்டுவதற்கும் அனுசரணை வழங்குவதை மேலும் பரவலாக்குதல்.

★ பாட விருத்தியின் பொருட்டு உள்ளக மதிப்பீடு, மேற்பார்வை செயன்முறை என்பவற்றை உரிய காலத்தில் திட்டமிட்டு ஒழுங்கான முறையில் செயற்படுத்துதல்.

★ ஆசிரியர்களின் பாட அறிவினை விருத்தி செய்வதற்கென கோட்டம், வலயம், அமைச்சு ஆகிய மட்டங்களில் நடாத்தப்படும் கருத்தரங்குகளில் பங்குபற்ற ஆசிரியர்களுக்கு சந்தர்ப்பம் அளித்தல்.

★ கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை மேம்படுத்துவதற்குப் பாடசாலை மட்ட ஆசிரியர் அபிவிருத்தி வேலைத்திட்டங்களைத் திட்டமிட்டு செயற்படுத்த வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.

★ நேர அட்டவணை தயாரிக்கும்போது பாட நிபுணத்துவமுடைய ஆசிரியர்களுக்கு முன்னுரிமை வழங்குதல்.

★ ஆசிரியர்களுக்கு அவர்களது பாடந்தொடர்பான பொறுப்பு ஏற்படும் வகையில் பாடத்திட்டத்தை செயற்படுத்த சந்தர்ப்பம் வழங்குதல். (குறிப்பிட்ட மாணவர் குழுவொன்றை ஒரே ஆசிரியரின் கீழ் சில வருடங்கள் அப்பாடத்தினைக் கற்க வழிசெய்தல்.)

★ வருடாந்த பரிசளிப்பு, சான்றிதழ் வழங்குதல் போன்றவற்றில் மேலும் கவனம் செலுத்துதல்.

★ வரலாறு பாட அபிவிருத்தியின் பொருட்டுப் பாடசாலையில் காணப்படும் வளங்களுக்கு அமைய இடம், உபகரணங்கள், நூல்கள், புறவுருப்படங்கள் என்பவற்றை வழங்குவதற்கு நடவடிக்கை எடுத்தல்.

★ ஏனைய பாடங்களில் பயிற்சி பெற்ற அல்லது நியமனம் பெற்ற ஆசிரியர்களின் நேர அட்டவணையை நிறைவு செய்யும் நோக்கில் வரலாறு கற்பித்தலில் அவர்களை ஈடுபடுத்துதலைத் தவிர்த்தல். இது பாடத்திற்கும் மாணவர்களுக்கும் ஏற்படுத்தும் தீங்காகும்.

**பாடத்திற்குப் பொறுப்பான ஆசிரியர்களுக்கான ஆலோசனைகள் :**

★ க.பொ.த. (சா.தர)த்திற்கு உரிய பாடத்திட்டத்தை பூரணப்படுத்தும் விதத்தில் கற்றல் கற்பித்தலை திட்டமிட்டு செயற்படுத்த வேண்டும்.

★ கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளில் ஆசிரியர் அறிவுரைப்புக் கையேட்டினை பரிசீலித்து அதனையும் கற்பித்தல் உபகரணமாகப் பயன்படுத்துவதில் அதிக கவனம் செலுத்துதல்.

★ கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளில் குறிப்பிட்ட தேர்ச்சி, பாட உள்ளடக்கம் என்பவற்றிற்குப் பொருத்தமான கற்பித்தல் முறையைத் தெரிவு செய்தல்.

★ இயன்றவரை கற்பித்தல் உபகரணங்களினூடாக எண்ணக்கரு அடைவிற்குச் சந்தர்ப்பம் அளித்தல்.

★ க.பொ.த. (சா.தர)ப் பரீட்சை தொடர்பான இலங்கைப் பரீட்சைத் திணைக்களத்தின் ஆய்வு அபிவிருத்திக் கிளை மூலம் தயாரிக்கப்பட்டுள்ள மதிப்பீட்டு அறிக்கையைப் பரிசீலனை செய்து அதனைப் பாட அபிவிருத்தியின் பொருட்டுப் பயன்படுத்துதல்.

★ குறைந்த அடைவு மட்டத்தைக் காட்டும் பாடப் பகுதிகள் தொடர்பாக அடைவு மட்டத்தை விருத்தி செய்வதற்கு விசேட வேலைத்திட்டம், செயற்றிட்டம், ஒப்படை போன்றவற்றை செயற்படுத்துதல்.

★ மாதாந்தப் பரீட்சை, தவணைப் பரீட்சை பாடசாலை மட்டக் கணிப்பீடு ஆகிய செயற்பாடுகள் மூலம் மாணவர்களின் அடைவு மட்டத்தை இனங்கண்டு விசேட அபிவிருத்தி செயற்றிட்டங்களை நடைமுறைப்படுத்துதல்.

3.2 **கற்றல் - கற்பித்தல் செயன்முறை பற்றிய கருத்துக்களும் ஆலோசனைகளும் :**

**கற்றல் - கற்பித்தல் மதிப்பீட்டு செயன்முறை என்பதன் மூலம் பெறுபேற்றில் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் பொருட்டு மேற்கொள்ள வேண்டியவை :**

- அனைத்து மாணவர்களிடமும் தனிப்பட்ட கவனத்தைச் செலுத்துதல்.
- கற்பித்தல் உபகரணங்களைப் பயன்படுத்தல்.
- பாட செயற்பாடுகளை ஆர்வமூட்டும் வகையில் ஒழுங்கு செய்தல்.
- திட்டமிட்ட களப்பயணங்களை ஒழுங்கமைத்தல். (பாடப் பரப்புடன் தொடர்புடைய)
- குறிப்பாக பாடநூல்களைக் கற்பதற்கு ஊக்கமளித்தல்.
- மாணவரின் ஆக்கங்களை (பாடத்துடன் தொடர்புடைய) வகுப்பில் காட்சிப்படுத்தல். (சுவர்ப் பத்திரிகை, சஞ்சிகைகள், புதிர்கள், குறுவினாக்கள் ஆகியவற்றை தயாரித்தல்.)
- வரலாறு பாடத்துக்கென அறை அல்லது ஒரு பகுதியை ஒதுக்கி அபிவிருத்தி செய்தல்.
- கற்றல் உபகரணமாக திறந்த நூல் பரீட்சைகளில் மாணவர்களை ஈடுபடுத்தி விடயங்களைத் தேடியறியச் செய்தல்.
- திருத்தமான புறவரிப்படங்களைப் பயன்படுத்துதல், படங்களின் தொகுப்பு நூல் தயாரிக்கச் செய்தல்.
- விடைகளை எழுதும்போது விடயங்களை பொருத்தமாக ஒழுங்கமைத்தல், முன்வைத்தல், பயிற்சிகளைச் செய்வித்தல்.
- கிராமம், பிரதேசம், நாடு என்பவற்றின் வரலாற்று இடங்கள், நிகழ்வுகள் என்பவற்றை மரபு வழிக் கதைகள் போன்றன மூலம் தேடியறிந்து தகவல்கள் சேகரிப்பதில் மாணவர்களை ஈடுபடுத்துதல்.
- தொலைக்காட்சி, வானொலி, செய்திப்பத்திரிகைகளின் கல்வி நிகழ்ச்சிகள், கலந்துரையாடல்கள், கட்டுரைகள் ஆகியன மூலம் தகவல்கள் சேகரிப்பதில் மாணவர்களை ஈடுபடுத்தல்.
- பிரபல வரலாற்று அறிஞர்களின் உதவி பெறுதல்.
- நுண்மதிக் குழுக் கலந்துரையாடல், பாடசாலையினுள்ளேயும் வேறு பாடசாலைகளுடனும் இணைந்து ஒழுங்கமைப்புகளை ஏற்படுத்துதல்.
- மாணவர் செயற்றிட்டம் நடைமுறைப்படுத்தல் கண்காணித்தலும் மதிப்பிடலும்.